

# மௌதூதி சாஹிபையும், அவரது ஜமாஅதே இஸ்லாமி இயக்கத்தையும் பற்றி மார்க்க அறிஞர்களின் தீர்ப்பு

உருது மூல நூல் :

மௌலானா மௌலவீ அபுல் ஜமீல்
முஹம்மது றிழ்வானுர் றஹ்மான் பாறூக்கீ,
முப்தீ, மால்வா (இந்தூர் சிட்டி) அவர்கள்

தமிழாக்கம் :

மௌலானா மௌலவி அல் - ஆலிமுல்
பாஸில் ஷெய்கு அப்துல் காதிர் ஆலிம் ஸூபி,
ஸித்தீக்கீ, காதிரி காஹிரி (கத்தஸல்லாஹூ
ஸிர்ரஹூல் அஜீஸ் அவர்கள்.

வெளியீடு :-

ஹிஸ்புல்லாஹ்சபை, ஸூபிமன்ஸில்
காயல்பட்டணம்
PIN 628 204 இந்தியா

Scanned by CamScanner

# பதிப்புரை

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் திருப்பெயரால் துவக்கம். புகழ் அனைத்தும் அவனுக்கே உரித்தாகுக!

கருணையும், ஈடேற்றமும் ஈருலக இரட்சகர், மன்ருடி கரைசேர்க்கும் மாண்பாளர், நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதும், அவர்கள் தம் கிளைஞர்கள், தோழர்கள், இறையன்பர்கள் மீதும் உண்டாவதாக!

"இஸ்லாம்" எனும் அழகிய பூந்தோட்டத்தில், அதன் எழில் அழகை கெடுப்பதற்காக வந்து ஒதுங்கிய ஆந்தைதான் வஹ்ஹாபிஸம். அது பல பல ரூபங்கள் எடுத்து வந்தபோதெல்லாம், நம் சன்மார்க்க காவலர்களான மாமேதைகள், இறைநேசச்செல்வர்கள் அவைகளை அடித்து ஒழித்துகட்டியே வந்துள்ளனர் என்பது வரலாறு.

இவ்வரிசையில் சமீபகாலத்தில், தப்லீக்ஜமாஅத், ஜமாஅத்தே இஸ்லாமி என்று தோன்றி மக்களை குழப்பத்தில் வீழ்த்தி, "மார்க்கம்" எனும் தலையை கழற்றி வீசிவிட்டு தான்தோன்றித்தனமாக வாயில் வந்ததே மார்க்கம் என்றும், தன் மரமண்டையில் தோன்றியதே சட்டம் என்றும் பிதட்டி வந்தகாலகட்டத்தில்,

இந்தூர் சிட்டி மால்வா மௌலானா அல்லாமா முப்தி அபுல்ஜமீல் முஹம்மது ரிழ்வானுர் ரஹ்மான் பாரூக்கி அவர்களால் எழுதப்பட்ட ஆயினே மவ்தூதிய்யத் எனும் ஆதாரப்பூர்வமான நூலை, தமிழ் உலகிற்கு அழகிய முறையில் மொழி பெயர்த்து எங்கள் குருநாதர் அல்லாமா அஷ்ஷெய்குல் காமில், அல்முஹிப்புர்ரஸூல் அஷ்ஷாஹ் ஷெய்கு அப்துல்காதிர் ஸித்தீகி பாழில் நூரி காதிரி காஹிரி ஸூபிஹழரத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் 1976ம் ஆண்டில் வெளியிட்டார்கள்.

Scanned by CamScanner

இது மக்களுக்கு பெரும்பயனை கொடுத்து, வழிகேடர்களுக்கு பேர் இடியாக அமைந்தது. அல்ஹம்துலில்லாஹ்.

ஷெய்குனா அவர்களின் மறைவுக்கப்பின் இலங்கை ஹிஸ்புல்லாஹ் சபையினர் 1983ம் ஆண்டு இரண்டாம் பதிப்பு செய்து வெளியிட்டனர்.

இருபதிப்புகளிலும் மேற்கோள்கள், ஆதாரங்கள் முழுவதும் தமிழில் மொழிப்பெயர்பாக மட்டுமே அமைந்திருந்தது.

மேற்கோள்கள், ஆதாரங்கள் அப்படியே அவர்களது நூற்களில் இருப்பதை போட்டோ பிளாக் எடுத்து ஆங்காங்கே கோடிட்டு இணைத்து வெளியிட்டால் இக்காலத்திற்கு பொருத்தமாகவும், அரபி, உர்து தெரிந்தவர்களுக்க மிகபயனுள்ளதாக அமையும் என்றுநாடி இம்மூன்றும் பதிப்பில் அதை இணைத்து வெளியிட்டுள்ளோம், மிகவும் பொருத்தமாகவும் அழகாகவும் அமைந்துவிட்டது. அல்ஹம்துலில்லாஹ்.

பொதுமக்கள் இதை ஆர்வமாக வாங்கிபடித்து தானும் பயன் பெறுவதுடன் இதர அன்பர்களுக்கும் பயன்பெறும் வாய்ப்பை அளிப்பீர்களாக.

எல்லாம் வல்லஅல்லாஹ் நம்மனைவர்களுக்கும் சன்மார்க்கத்தில் பூணிப்பையும் பற்றுதலையும், மோசக்காரர்களின் நாசத்தைவிட்டும் பாதுகாப்பையும் தந்தருள்வானாக, ஆமீன்.

இவன்

ஹிஸ்புல்லாஹ் ஸபையினர். ஸூபிமன்ஸில்

முதல் பதிப்பு : 1396 முஹர்ரம் 1976 ஜனவரி காயல்பட்டணம்
இரண்டாம் பதிப்பு : 1403 ரமழான் 1983 ஜூலை
மூன்றும் பதிப்பு : 1412 ஷஃபான் 1992 பிப்ரவரி

Scanned by CamScanner

بسم الله الرحمن الرحيم

حمدا لك يا رحمن وصلوة وسلاما عليك يا سيد بني
عدنان وعلى آلك وأصحابك الذين هم نجوم سماء
الهداية والعرفان

அருளாளனே, உன்னையே புகழ்கின்றோம். அத்னான் கிளையில் உதித்த நாயகமே, உங்கள் பேரிலும், உங்கள் கிளையார்கள் பேரிலும், மெய்ஞானம், நேர்வழி எனும் வானத்தின் நட்சத்திரங்களான உங்கள் தோழர்கள் பேரிலும் ஸலவாத்தும் ஸலாமும் சொல்கின்றோம்.

அன்புடைய சகோதரர்களே!

இந் நூலை (உங்கள் சமூகம்) சமர்ப்பிக்கக் காரணம். இற்றையிலிருந்து இரண்டாண்டுகளுக்கு முன்பு மௌலவி அபுல் அஃலா மௌதூதியின் தஜ்தீது இயக்கமாகிய ஜமா அதே இஸ்லாமி இயக்கத்தில் முஸ்லிம்கள் சேர்வதும், மௌதூதியாக்களைத் தொடர்ந்து முஸ்லிம்கள் தொழுவதும் ஆகுமா? அல்லது, விலக்கப்பட்டதா? தொடர்ந்து தொழுதால் அத்தொழுகை கூடுமா? கூடாதா? என்று கேள்விகள் எழுந்தன. அச்சமயத்திலே அவற்றிற்குச் சுருக்கமான விடைகளும். எழுதி அனுப்பப்பட்டன. சில நாட்களில் எதிரிகளின் வினாக்களும், குதர்க்கங்களும் நின்றுவிட்டன. விளக்கங்கள் கேட்பது ஆரம்பமாகிவிட்டது. எனினும் அத்தகைய கேள்விகளின் போக்கு குதர்க்க நோக்குடையதாகவும், வெறும் வாய்ச்சொல் அளவுடையதாகவுமே இருந்தது. மேலும் தபால் மூலம் விடைபெற விரும்பியவர்கள் பதில் கொடுக்க தபால் முத்திரை கூட வைத்தனுப்பாமல் வெறும் கேள்வி மாத்திரமே கேட்டனர். ஆகவே, அத்தகைய வெறும்

Scanned by CamScanner

கேள்விகளுக்கு, குதர்க்க வினாக்களுக்கு விடை கொடுக்காதிருப்பதே உசிதமெனக் கருதப்பட்டது. சில காலத்திற்குப் பிறகு, கீழ்க்காணும் வாசகத்துடன் ஒரு கடிதம் வந்தது :

"மௌலவி மௌதூதி சாஹிபுடைய விஷயத்தில் உங்களுடைய அபிப்பிராயம் யாது? அவருடைய கொள்கைகள் எத்தகையவை? ஸுன்னத்துவல் ஜமாஅத்து முஸ்லீம்கள் அவருடைய இயக்கத்தில் சேருவது ஆகுமா? ஆகாதா? தாங்கள் வாய்மூடி இருப்பதுவும், வினாக்களுக்கு விடை கொடுக்காமல் இருப்பதுவும் பெருங் கஷ்டத்தைக் கொடுப்பதுவும், பெரும் சங்கடங்களுக்குக் காரணமுமாகும். மேற்சொன்ன இயக்கத்தின் அழைப்பில் பொது ஜனங்கள் மயங்கி மனதைப் பறி கொடுத்து விடுகின்றார்கள். தாங்கள் இதுபற்றிச் சீக்கிரமாக விடை எழுதுவீர்கள்; உண்மையை வெளிப்படுத்த எந்த விதத்திலும் தயக்கம் கொள்ள மாட்டீர்கள் என உங்கள் பேரில் எனக்குப் பூரண நம்பிக்கையுண்டு. வஸ்ஸலாம்." இக்கடிதத்தின் கலப்பற்ற வசனங்களைப் பார்த்துவிட்டு, ஸுன்னத்துவல் ஜமாஅத்து பொது ஜனங்கள் மௌதூதியுடைய இயக்கத்தில் சேரலாமா? சேரலாகாதா? என்பது பற்றிய சரியான தீர்மானத்தை எடுத்துக் கொள்வதற்காக இந்நூலை வரைகின்றேன்.

"என்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் நேர்மையாக்குவதேயல்லாமல் வேறொன்றையும் நான் கருதுகின்றதில்லை. எனக்கு உதவி அல்லாஹ்வைக் கொண்டே அன்றி இல்லை."

மௌலவி மௌதூதியின் ஜமாஅத்தே இஸ்லாம் இயக்கமானது இந்திய பூமியில் புதிதாகத் தோன்றிய இயக்கமன்று என்பது அறிவாளர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் மறைந்ததில்லை. இதற்கு முன்னர் காதியானி, நேச்சாரி, வஹ்ஹாபி, பாபி, பஹாயி, சக்டாலவி முதலிய அநேக இயக்கங்களும், கூட்டங்களும்

Scanned by CamScanner

தோன்றின. அவற்றின் அழகிய விலாச போர்டைப் பார்த்துவிட்டு பல்லாயிரக்கணக்கான, இலட்சக்கணக்கான முஸ்லிம்கள் வழிபிசகிப்போனூர்கள். அந்த இயக்கங்களின் ஸ்தாபகர்களுடைய கெட்ட கொள்கைகளேயும், தவறுன சிந்தனேகளேயும், செல்லாக் கற்பனேகளேயும் கொண்டு சீர்திருத்தம் பெறுவதற்குப் பதிலாக வீணே சீரழிந்தார்கள். நேர்வழி எனும் குன்றில் ஏறுவதற்குப் பதிலாக வழிகேடு எனும் பாதாளப்படுகுழியிலேயே விழுந்தார்கள். எனவே முந்திய இயக்கங்களின் கசப்பான சுவையை அநுபவித்ததைக் கொண்டாயினும் முஸ்லிம்கள் பாடம் கற்றுக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

ஜமாஅத்தே இஸ்லாமிஸ்தாபகர் மௌலவி அபுல் அஃலா மௌதூதியின் கொள்கை, சிந்தனேகளேப்பற்றி அறிந்து கொள்வதற்கு முன்னுல், ஒருபோதும் இந்த இயக்கத்தில் சேர்ந்து கொள்வதற்கு நாட்டம் வைக்காதிருக்க வேண்டும். ஏனெனில், மார்க்க சம்பந்தமான எந்த இயக்கத்திலாளுலும் சரி, அதில் சேர்ந்தபின்னர், சேர்ந்தவர்கள் எல்லாரும் அந்த இயக்க ஸ்தாபகருடைய கொள்கையின் குணபாட்டைப் பெறவே செய்வார்கள் என்பது பகிரங்கமாகத் தெரிந்த விஷயம். இதற்காகவேதான் சர்வலோகத்திற்கும் ஸர்தாராண எங்கள் ஸெய்யிதுனு முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் முஸ்லிம்களேக் கெட்ட கொள்கைக்காரர்களின் சகவாசத்தை விட்டகன்று நீங்கி இருக்கும்படியாகக் கண்டிப்பான கட்டளேயை இட்டுள்ளார்கள். இமாம் முஸலிம் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தங்களின் ஸஹீஹு முஸ்லிமில் அபுஹுறைரு ரலியல்லாஹுதஅலாஅன்ஹு அவர்களேத் தொட்டும் ரிவாயத்துச் செய்து அறிவிக்கின்றூர்கள். எம் பெருமானுர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சொல்கின்றூர்கள்:-

يَكُونُ فِي آخِرِ الزَّمَانِ دَجَّالُونَ كَذَّابُونَ يَأْتُونَكُمْ
مِنَ الْأَحَادِيثِ بِمَا لَمْ تَسْمَعُوا أَنْتُمْ وَلَا آبَاؤُكُمْ
فَإِيَّاكُمْ وَإِيَّاهُمْ لَا يُضِلُّونَكُمْ وَلَا يَفْتِنُونَكُمْ
(اخرجه مسلم)

"கடைசி காலத்தில் ஏமாற்றுக்காரர்களும் பொய்யர்களும் வருவார்கள். நீங்களோ, உங்கள் மூதாதைகளோ கேட்டிராத சங்கதிகளையெல்லாம் சொல்வார்கள். அவர்கள் கிட்டவும் போகாதீர்கள். அவர்களை உங்கள் கிட்டவும் வரவிடாதீர்கள். (அவ்வாறானல்தான்) உங்களை அவர்கள் வழிகெடுக்க மாட்டார்கள்; குழப்பத்திலாக்க மாட்டார்கள்."

இந்த ஹதீது வியாக்கியானத்தில், முஹத்திது அல்லாமா முல்லா அலி காரீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் மிஷ்காத்து ஷரீபின் விரிவுரையான மிர்காத்தில் சொல்கின்றார்கள்:-

يُحَدِّثُونَ بِالْأَحَادِيثِ الْكَاذِبَةِ وَيُبْدِعُونَ
أَحْكَامًا بَاطِلَةً وَاعْتِقَادَاتٍ فَاسِدَةً (مرقاة)

"அவர்கள் பொய்யான சங்கதிகளைச் சொல்வார்கள் தவறான (ஹுக்மு) தீர்மானங்களையும், மோசமான (அகீதா) கொள்கைகளையும் நூதனமாக (பித்அத்)க் கொண்டு வருவார்கள்."

Scanned by CamScanner

கெட்ட கொள்கைக்காரர்களின், கெட்ட போக்குடையவர்களின் சகவாச தோஷத்தின் குணபாடு அவர்களுடன் அண்டி இருப்பவர்களையும் சேர்த்துப் பிடிக்கும். நாளாம்பரத்தில் இவர்களையும் அத்தகைய கொள்கைக்காரராகவே ஆக்கிவிடும் என்பது இந்த ஹதீதினில் துலாம்பரமாக விளங்குகின்றது.

இனி, மௌதூதி அபிமானிகள் எங்களுக்கு மௌதூதி சாஹிபின் கொள்கையைப்பற்றிப் பேச்சில்லை: அவர் முகல்லிது ஆகட்டும்; முகல்லிது அல்லாதவர் ஆகட்டும்; நாங்கள் ஏதோ அவரின் இயக்கத்தில்

சேர்ந்திருக்கின்றோமேயல்லாது அவருடைய கொள்கையின்படி நாங்கள் நடக்கப்போவதில்லை என்று சொல்வதானது வெறும் ஏமாற்றமும், மோசடியுமாகும். நேர்மையான புத்தியுடைய எவரும் இக்கூற்றை ஒப்புக் கொள்ள மாட்டார்.

சில வருடங்களுக்கு முன் காக்சாரி இயக்க விஷயமாகவும் இதே கருத்துத்தான் வெளிப்படுத்தப்பட்டது. நாங்கள் காக்சாரி இயக்கத்தில்தான் சேர்ந்திருக்கின்றோமேயல்லாது காக்சாரி இயக்க ஸ்தாபகரான மஷ்றாகி சாகிபுடைய கொள்கையைப் பற்றியோ, அவரது மதுஹபைப் பற்றியோ எங்களுக்கு ஒரு சம்பந்தமும் இல்லை என்றும் காக்சாரிகளில் சிலர் சொல்லவும் செய்தார்கள். அந்தச் சமயத்திலே, இதே மௌதூதி சாஹிபு தானே காக்சாரிகளின் இந்த எண்ணம் தவறானது; ஏமாற்றமானது என்று சுட்டிக் காட்டிச் சொன்னார். மௌதூதி சாஹிபால் எழுதப்பட்ட "காக்சாரி இயக்கம்" என்ற நூலில் அவர் வரைந்துள்ளார்:-

"رہی یہ بات کہ ہمیں صرف سپاہی بننے کی مشق مطلوب ہے
یا فوجی نظم درکار ہے، لیڈر کے خیالات سے سروکار نہیں یہ ایک
سراسر لغویات ہے۔ جسے کوئی صاحبِ عقل ایک لمحہ کے لئے بھی

Scanned by CamScanner

باور نہیں کر سکتا۔ آپ کسی تحریک میں شامل ہوں اور اس کے لیڈر
سے متاثر نہ ہوں یہ ناممکن ہے لیڈر کی روح پوری تحریک کی روح
ہوتی ہے اور پیروؤں میں آپ سے آپ سرایت کرتی ہے کوئی شخص
اس سے متاثر ہوئے بغیر نہیں رہ سکتا۔

(رسالہ خاکسار تحریک از مودودی صاحب)

"நாங்கள் சிப்பாய்களாகப் பயிற்சி பெற வேண்டுமென்பது தான் எங்கள் நோக்கம். பட்டாளத்தில் சேர்ந்து கொள்ள வேண்டும் என்பது தான் எங்கள் குறிக்கோள். லீடருடைய கொள்கையைப் பற்றிக் கவனிப்பது எங்கள் வேலையில்லை என்று சொல்வதானது முழுக்க முழுக்க வீணான பேச்சாகும். இதை ஒரு புத்திசாலி சிறிது கூட எற்கமாட்டான். நீங்கள் ஒரு இயக்கத்தில் சேர்கிறதும், அதே நேரத்தில் அதன் லீடருடைய குணபாட்டைப் பெறாதிருப்பதும் ஒரு போதும் சாத்தியமானதல்ல. லீடரின் றூஹு இயக்கத்திற்கும் றூஹாகும். இயக்கத்தில் சேர்ந்தவர்களிலெல்லாம் அது தானாகவே ஊடுருவிப் பாய்ந்து வேலை செய்யவே செய்யும். எந்த மனிதனும் அதைக் கொண்டு குணபாடு பெறாதிருக்க முடியாது."

ஜனாப் மௌதூதி சாஹிபின் இவ்வார்த்தைகளைக் கேட்ட பின்னர், மௌதூதி இயக்கத்தில் சேர்ந்தவர்களும் கூட எந்த விதமான ஆட்சேபனையுமில்லாது நமது இந்த அபிப்பிராயத்தில், அதாவது எந்த ஒரு இயக்கத்திலும் சேருவதற்கு முன்பு அந்த இயக்கத்தை ஸ்தாபித்தவரைப் பற்றியும், அவரது கொள்கைகளைப் பற்றியும், சிந்தனைகளைப் பற்றியும் விளங்கித் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியமேதான் என்பதில் நமது கருத்துக்கு ஒத்தே இருப்பார்கள் என்று நம்புகின்றோம்.

Scanned by CamScanner

# ஜனாப் மௌதூதி சாஹிபின் கொள்கைகளும் ஆராய்ச்சிகளும்

இச்சிறிய நூலில் ஜமாஅத்தே இஸ்லாமி இயக்க ஸ்தாபகர் மௌதூதி சாஹிபுடைய கொள்கைகள் பூராவையும் எழுதுவது அசாத்தியம் என்றில்லாவிடினும் அது மிகக் கஷ்டமான காரியமேயாம். என்றாலும் மௌதூதி சாஹிபைப் பற்றியும், அவருடைய இயக்கத்தைப் பற்றியும் சரியானதோர் முடிவுக்கு வருவதற்கு இலகுவாக இருக்கும் பொருட்டு அவருடைய சில குறிப்பான சிந்தனைகளையும் ஆராய்ச்சிகளையும், கொள்கைகளையும், வாசகர்களுக்கு முன்னால் கொண்டு வருகிறோம்.

## குர்ஆனுடைய தப்ஸீர் விளக்கத்தைப் பற்றிய கட்டுரைத் தொடரில் மௌதூதி சாஹிபின் கருத்து

மௌதூதி சாஹிபிடத்தில் குர்ஆனுல் கரீமை விளங்கித் தெரிந்து கொள்வதற்கு எந்தத் தப்ஸீரின் அவசியமுமில்லை. அவர் தன்னுடைய 'தன்கீஹாத்' என்ற நூலின் 33வது பக்கத்தில் சொல்கிறார்.

"قرآن وسنت کی تعلیم سب پر مقدم ہے مگر تفسیر اور احادیث کے پرانے ذخیرے سے نہیں۔ (تنقیحات ص ۳۳)

"குர்ஆனையும் ஹதீதையும் கற்றுக் கொடுப்பதானது (மற்றும் கல்விகள்) எல்லாவற்றையும் விடவும் முந்தினதாகும். ஆனால் தப்ஸீர், ஹதீதுகளின் புராண (ஸ்டாக்) தங்கரிப்புகளிலிருந்து அல்ல."

Scanned by CamScanner

ஒவ்வொரு மனிதனுக்கும் நன்கு தெரியும். அல்லாஹ் ஸுப்ஹான ஹுவத்தஆலா தனது மஹ்பூபாகிய ஸெய்யிதல் ஆலம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பேரில் குர் ஆன் ஷரீபை அரபி பாஷையால் அருளி இருக்கிறன். மேலும் பகிரங்கமாகத் தெரிந்த விஷயம், சங்கையான ஸஹாபாக்கள் ரலியல்லாஹுதஆலா அன்ஹும் பெரும்பாலும் அரபிதேச வாசிகளாயிருந்தனர். அரபியே அவர்களின் தாய்ப்பாஷை. அஜமிகளை விடவும் அவர்களுக்கு குர்ஆனுல் கரீமின் பொருளையும், கருத்தையும் விளங்கிக் கொள்வது மிகவும் எளிதாகும். அப்படியிருந்தும்கூட அந்த ஸஹாபாக்கள் குர்ஆன் ஷரீபின் ஆயத்துக்களுடைய பொருளையும் கருத்தையும் விளங்கிக் கொள்வதற்காக தப்ஸீர் வியாக்கியானத்தினளவில் தேவையுடையவர்களாக இருந்தார்கள். அவர்களின் நிலைமை எப்படி இருந்தது என்றல் எப்பொழுதாகிலும் எந்த ஒரு ஆயத்தின் கருத்தை விளங்கிக் கொள்ளும் விஷயத்தில் அவர்களுக்குக் கஷ்டமேற்படுமானல் உடனே இறையருள் தூதுவர் சமூகம் எம் பெருமானர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சன்னிதானத்திற்கு ஆஜராகிக் கேட்பார்கள். சங்கையான நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இதற்கு விளக்கம் கொடுத்து அவர்களுக்கு மனச்சாந்தியை உண்டு பண்ணுவார்கள். இம்மாதிரியான அநேக சம்பவங்கள் ஹதீதுக் கிரந்தங்களில் வரையப்பட்டுள்ளன. பின்பு, இவ்விதமாகவே தாபியீன்கள் ரஹிமஹுல்லாஹ் சங்கையானஸஹாபாக்களிடம் சென்று குர்ஆன் ஆய்த்துக்களுக்கு வியாக்கியானம் கேட்கிறவர் களாயிருந்தார்கள். இவர்களுக்குப் பின்னல் உள்ள எல்லா உலமாக்களிடத்திலும், புகஹாக்களிடத்திலும் குர்ஆன் ஷரீபின் கருத்தை விளங்கும் விஷயத்தில் இதே முறைதான் இருந்து வந்தது. இந்த எல்லா முன்னேர்களும் குர்ஆன் ஷரீபுக்கு, அகிலலோக ஸர்தார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைத் தொட்டும, சங்கையான அவர்களது ஸஹாபாக்களைத் தொட்டும், மேதைகளான தாபியீன்களைத் தொட்டும் ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கும் படியான வியாக்கியானங்களை அடிப்படையாக வைத்துக் கொண்டே கருத்து, வியாக்கியானங்களைத் தெரிந்து கொள்வார்கள்.

இவர்களிடத்தில் தங்களது மனம் போல் சுயபுத்தியையும், சுயயோசனை அபிப்பிராயத்தையும் அடிப்படையாகக் கொண்டு குர்ஆன் ஷரீபுக்கு வியாக்கியானம் செய்ய முற்படுவது பொருத்தமற்ற காரியம் மட்டுமல்ல, தகாத ஆகாத காரியமுமாகும்.

இப்பொழுது சிந்திக்க வேண்டியதாவது: அரபிநாட்டிலேயே பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து அரபியையே தங்கள் தாய்பாஷையாகக் கொண்டு அரபியைக் கற்றுத் தேர்ந்தவர்களும் கூட குர்ஆனின் பொருளை விளங்கிக் கொள்வதற்கு (தப்ஸீர்) வியாக்கியானத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டிய கட்டத்தை விட்டும் தேவையற்றிருக்கவில்லை. அதன் பொருளை விளங்கிக் கொள்வதற்காக அவர்கள் யாவரும் றசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வியாக்கியான, தப்ஸீர் விளக்கத்தளவில் தேவையுடையவர்களாக இருந்தனர் மேலும், அவர்கள் தங்களின் சொந்த அபிப்பிராயப்படியும், தம் புத்திப் பிரகாரமும் அதற்கு வியாக்கியானம் செய்வது தகாத, விலக்கப்பட்ட காரியம் என்றும் உணர்ந்திருந்தார்கள்.

ஆனால் இந்த மௌதூதி சாஹிபோ ஹிந்துஸ்தானிலுள்ள அரபியல்லாதவர்களுக்கு யோசனை சொல்கிறார்; குர்ஆனை விளங்குவதற்கு எந்தத் தப்ஸீரும், விரிவுரையும் தேவையில்லை. எந்த (முபஸ்ஸிர்) விரிவுரையாளரும் தேவையில்லை என்று. தப்ஸீர், ஹதீதுடைய பழைய கிரந்தங்களையெல்லாம் வீணானவை, பயனற்ற புராணங்கள் என இவர் கழித்துத் தள்ளுகிறார். குர்ஆன் ஷரீபுக்கு ஸஹாபாக்களால் ரிவாயத்துச் செய்யப்பட்ட வியாக்கியானத்தை விட்டுவிட்டு தனது சுய அபிப்பிராயத்தைக் கொண்டும், தன் புத்தியைக் கொண்டும் வியாக்கியானம் செய்யமுற்படுபவன் நரகவாதியாவான் என்பது கூடவா இந்த மௌதூதி சாஹிபுக்குத்தெரியாது. நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் இந்தப் பொன்மொழியைக் கூடவா அவர் கேட்டதில்லை.

Scanned by CamScanner

مَنْ فَسَّرَ الْقُرْآنَ بِرَأْيِهِ فَلْيَتَبَوَّءْ مَقْعَدَهُ مِنَ النَّارِ

( اخرجه مسلم فى صحيحه )

"எவன் குர்ஆனுக்கு தன் சுயஅபிப்பிராயத்தின் பிரகாரம் வியாக்கியானம் செய்கிறுனே. அவன் தனது இருப்பிடத்தை நரகத்திலாக்கிக் கொள்ளட்டும்." என்று ஸஹீஹு முஸ்ஸிமில் ஹதீது வந்துள்ளது.

இவ்விடத்தில் இதையும் சொல்ல வேண்டியது அவசியமாகும். அதாவது: மௌதூதி சாஹிபுடைய இந்த ஆராய்ச்சி புதியதோர் ஆராய்ச்சியல்ல. அவர் சொன்னதெல்லாம் இதற்கு முன்பும் மற்ற வஹ்ஹாபிகள் சொன்ன ஆராய்ச்சி யோசனையே, இவர் ஊக்குவித்துச் சொன்னதாக இருக்கின்றது. இதற்க முன்னுல் இதே யோசனையைச் சொல்லித்தான் வஹ்ஹாபிகள் முஸ்லிம்களை வழிகெடுக்க முயற்சிகள் செய்து முடித்தனர். இந்த விஷயம், "தக்வியதுல் ஈமான்" முதலிய வஹ்ஹாபிகள் நூற்களைப் படித்துப் பார்த்தால் நன்கு விளங்க வரும்.

அன்னவர்களுடைய கருத்து இதுவே: "முஸ்லீம்களைத் தப்ஸீர், ஹதீதுடைய பிரகாசத்திலிருந்து அப்புறப்படுத்தி வைத்து அவர்களின் மனதுகளில் தங்களுடைய வழிகேடான கொள்கைகளையும் கருத்துக்களையும் திணித்து வழி கெடுத்து விடலாம். அந்தப் பாமர முஸ்லிம்களுக்கு நாம் அவர்களுடைய மனதுகளில் இவ்வாறு திணிக்கும் விபரங்கூடத் தெரியாது இருட்டடிப்புச் செய்து விடலாம்"

## ஹதீதுகள் சம்பந்தமாக மௌதூதியின் கருத்து:

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஹதீது சம்பந்தமாக, தனது கருத்து யாதென்பதை மௌதூதி சாஹிபு தன்னுடைய "தப்ஹீமாத்து" எனும் நூலின் 292வது பக்கத்தில் பின் வருமாறு வெளிப் படுத்துகிருர்:-

Scanned by CamScanner

"آپ کیسے کہہ سکتے ہیں کہ جس (حدیث کو) وہ (محدثین) صحیح قرار دیتے ہیں وہ (حدیث) حقیقت میں بھی صحیح ہے صحت کا کامل یقین تو خود ان (محدثین) کو بھی نہ تھا (تفہیمات ص ۲۹۲"

"(ஹதீதுகளில்) எதை அவர்கள் (முஹத்திதீன்) ஸஹீஹானது என்று ஸ்தாபிக்கின்றார்களோ அது (அந்த ஹதீது) யாதார்த்தத்திலேயே ஸஹீஹானதுதான் என்று நீங்கள் எப்படி சொல்லமுடியும்? ஸஹீஹானதுதான் என்பது பற்றிய பூரண (யகீன்) நம்பிக்கை அவர்களுக்கு (முஹத்திதீன்களுக்கும்) கூடக் கிடையாது."

மேலும் அவர் தனது "தப்ஹீமாத்து" நூலின் 302வது பக்கத்தில் சொல்கின்றார்:-

"آپ کے نزدیک ہر اس روایت کو حدیث رسول مان لینا ضروری ہے جسے محدثین سند کے اعتبار سے صحیح قرار دیں. لیکن ہمارے نزدیک یہ ضروری نہیں. تفہیمات ص ۳۰۲"

"முஹத்திதீன்கள் ஸனதைக் கவனித்து இது ஸஹீஹானது தான் என்று ஸ்தாபிக்கக் கூடிய ஒவ்வொரு ஹதீதையும் அது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஹதீதுதான் என்று நம்புவது உங்களிடத்தில் அவசியமாக இருக்கலாம். ஆனால் எங்களிடத்தில் அவ்வாறான அவசியமில்லை."

இன்னும் மேற்கண்ட 'தப்ஹீமாத்' தின் 303வது பக்கத்தில் எழுதுகிறார்:-

Scanned by CamScanner

"محدثین جن بنیادوں پر احادیث کے صحیح یا غلط یا ضعیف وغیرہ
ہونے کا فیصلہ کرتے ہیں ان کے اندر کمزوری کے مختلف میں بیان
کرچکا ہوں"

"முஹத்திதீன்கள் எந்தத்திட்டத்தின் பேரில் ஹதீதுகளை இவை ஸஹீஹானவை, இவை தவறானவை, இவை ளயீபானவை என்று, இவ்வாறாக மற்றும் வெவ்வேறு வகையானவை என்று முடிவு செய்கின்றார்களோ அந்த அடிப்படைத்திட்டத்தில் பலஹீனத்துக்குரிய பல அம்சங்கள் இருப்பதாக (முன்னரே) நான் விபரித்திருக்கிறேன்."

மௌதூதி சாஹிபுடைய மேற்குறிப்பிட்ட வாசகங்களின் சாராம்சம் இதுதான். அதாவது:-

1. முஹத்திதீன்கள் எந்த ஹதீதையாவது ஸஹீஹானது என்று சொல்வதானது அந்த ஹதீது ஸஹீஹுதான் என்பதற்கு ஆதாரமாகாது.

2. முஹத்திதீன்கள் எந்த ஹதீதையாவது ஸஹீஹானது தான் என்று சொன்னாலுங்கூட அது ஸஹீஹானதுதான் என்பதன் பேரில் அவர்களுக்கும் பூரண நம்பிக்கையில்லை.

3. முஹத்தீதீன்கள் ஸனதைக் கவனித்து ஒரு ஹதீதை ஸஹீஹானது என்று சொன்ன போதிலும் அது ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஹதீதுதான் என்று ஒப்புக் கொள்வது அவசியமில்லை.

4. முஹத்திதீன்கள் எந்த அடிப்படைத் திட்டத்தைக் கொண்டு ஹதீதுகளை இது ஸஹீஹானது. இது ளஈபானது' என்று காட்டுகின்றார்களோ அந்த அடிப்படைத் திட்டம் மௌதூதி சாஹிபிடத்தில் பலஹினமானதாக இருக்கும்.

Scanned by CamScanner

இப்பொழுது சொல்லுங்கள்! எந்த சஹீஹான ஹதீதையோ, இது ஸஹீஹானதுதான் என்று மௌதூதி சாஹிபிடத்தில் நிரூபித்துக்காட்ட எவரால்தான் முடியும்? எந்த ஹதீதையாவது அவரிடத்தில், 'இதை முஹத்திதீன்கள் ஸஹீஹானது என்று சொல்லியிருக்கின்றார்கள்.' எனச் சொல்லப்பட்டால் உடனே அவர் "முஹத்திதீன்கள் எந்த ஹதீதை சஹீஹானது என்று சொல்லுகின்றார்களோ அது என்னிடமும் ஹஹீஹானது என்று ஏற்கப்பட வேண்டியதில்லை," என்றே சொல்வார்.

மேலும் எந்த ஹதீதையாவது அவரிடத்தில் 'இந்த ஹதீது ஸ ஹீஹானது என்று சொல்லப்பட்டால், அவர் —எந்த ரிவாயத்துடைய அல்லது ஸனதுடைய ரீதிப்படியோ முஹத்திதீன்களிடத்தில் ஒரு ஹதீது ஸஹீஹானதாக ஆகின்றதோ. அது எம்மிடத்திலும் ஸஹீஹானதாக ஆகுவது அவசியமில்லை, என்றே சொல்வார்.

முடிவாக மௌதூதி ஸாஹிபிடத்தில் எத்தகைய பரிசுத்தமான ஹதீதைக் கொண்டானாலும் சரி அவரிடம் ஆதாரம் காட்டமுடியாது. அது அசாத்தியம், ஏனெனில் பூர்வீகமான ஹதீதுகளெல்லாம் பழைய –'ஸ்டாக்' கான புராண நூற்கள் என்றும், வீணானவை என்றும் அவரால் கருதப்பட்டுள்ளன. பெரும்பாலும் இந்த அடிப்படையில்தான் அவர் அலிகார் சர்வகலாசாலை மாணவர்களுக்கு மார்க்கக் கல்விப் போதனைத் திட்டத்தை வகுக்கக்கூடிய விதமாகத்தான் பின் வருமாறு சொல்லியிருக்கிறார் போலும்:—

"قرآن اور سنتِ رسول کی تعلیم سب پر مقدم ہے مگر تفسیر و حدیث کے پرانے ذخیروں سے نہیں (تنقیحات صفحہ ۱۳۳)"

"குர்ஆனையும் றசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய ஹதீதையும் கற்றுக் கொடுப்பது (மற்றெல்லாவற்றையும்விட) முந்தினதாகும். ஆனல் (அப்படிக் கற்றுக் கொடுப்பது முன்னுள் ஏடுகளான புராண தப்ஸீர், ஹதீதுகளுடைய இருப்புச் சரக்கிலிருந்தல்ல." (தன்ஹீகாத்து - பக்கம் 133)

தப்பித் தவறி எப்படியாவது சாஹிபு எந்த ஓர் ஹதீதையாவது, அது ஸஹீஹானது (நாயக வாக்கியம்) தான் என்று ஒப்புக் கொண்ட போதிலும் அதைக் கட்டுக் கதை, அல்லது நபியவர்களின் (கியாஸ்) அனுமானம் என்று சொல்லி அதனுல், அது அமல் செய்வதற்குத் தகுதியற்றது, நம்பத்தக்கதல்ல என்றும் அவர் ஸ்தாபிக்க முற்படுவார். உவமைக்கு இதோ அவருடைய எழுத்தே சான்று:-

"یہ کانا دجال وغیرہ تو افسانے ہیں جن کی کوئی شرعی حیثیت نہیں ہے" (ترجمان القرآن ماہ ستمبر و اکتوبر ۴۵ء)

"ஒற்றைக் கண்ணன் தஜ்ஜால் சங்கதி, (இதுபோன்ற) மற்ற சங்கதிகளெல்லாம் பழங்காலக் கட்டுக்கதைகளாகும். இவற்றிற்கெல்லாம் மார்க்க ஷரீஅத்தின் ரீதியாய் யாதொன்றும் கிடையாது" (மௌதூதியின் தர்ஜுமானுல் குர்ஆன், 1945 செப்டம்பர் - அக்டோபர்)

ஒற்றைக்கண்ணன் தஜ்ஜால் வருகை பற்றி எந்த ஹதீதுகள் ஸஹீஹானவைகளாக வந்துள்ளனவோ அவற்றைத்தான் மௌதூதி சாஹிபு பழங்காலக் கட்டுக்கதைகள் என்று குறிப்பிடுகிறுர், மேலும் தஜ்ஜால் விஷயமாக இவர் சொல்வதைக் கவனியுங்கள்:-

"ان امور کے متعلق جو مختلف باتیں حضور سے احادیث میں منقول ہیں وہ دراصل آپ کے قیاسات ہیں جن کے بارے میں آپ خود شک میں تھے" (ترجمان القرآن بابت ماہ فروری ۴۶ء)

لیکن کیا ساڑھے تیرہ سو برس کی تاریخ نے یہ ثابت نہیں کر دیا کہ حضور کا یہ اندیشہ صحیح نہ تھا۔ (ترجمان مذکور)

"எந்த விஷயங்கள் சம்பந்தமாக நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைத் தொட்டும் விதர்ப்பமான பேச்சுக்கள் ஹதீதுகளில் ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கின்றனவோ அவைகள் அசலில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய (கியாஸ்) அநுமானங்களாகும். அதில் அவர்களும் கூடசந்தேகத்தில்தான் இருந்தார்கள். (மௌதூதியின் தர்ஜுமானுல் குர்ஆன் – 1946 பெப்ரவரி)

அதில் அவர் மேலும் தொடர்ந்து,

"ஆனால் பதின்மூன்றரை நூற்றாண்டுச் சரித்திரம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் இந்த உத்தேச அநுமான அபிப்பிராயம் சரியல்ல என்பதாக நிரூபித்துக் காட்டவில்லையா?" என்றும் கேட்கிறார்.

எதார்த்தம் என்னவென்றால், இந்த மௌதூதி அவருடைய வழிகெட்ட முன்னோர்களெல்லாம் சாதிக்க முடியாத காரியத்தையெல்லாம் சாதித்துவிட்டார். 'ஹதீதை ஒப்புக்கொள்ளாமல் மௌதூதி சாஹிபு மறுக்கிறார்' என்று யாரும் புகார் சொல்லிவிடக்கூடாதென்பதற்காக அவர் 'குர்ஆனையும் ஹதீதையும் கற்றுக் கொள்வது அவசியம்' என்று ஒருபுறம் காட்டிக்கொள்கிறார். ஆனால் மற்றொரு புறத்தில், ஹதீதுகளின் அசல் அடிப்படைத் திட்டங்களை பலஹீனமானவை எனவும், ஸஹீஹான ஹதீதுகளை நம்பிக்கைக்குரியவையல்ல எனவும், கழித்து உம்மத்தே முஹம்மதியாவிடம் அழியாப் பொக்கிஷமாய் உள்ளதும், திரட்டிச் சேகரிக்கப்பட்ட தன்மை பற்றி இஸ்லாமிய உலகமே பெருமை கொள்ள வேண்டியதுமான புகாரி, முஸ்லிம், திர்மிதீ, அபூதாவுது முதலிய ஸஹீஹுகளையும், மற்றும் முஹத்திதீன்களுடைய ஹதீதுக் கிரந்தங்களையும், ஸுனன்களையும், நம்பிக்கைக்குரியன அல்லவென்றும், இவையனைத்தையும் ஆதாரமாகக் கொண்டு அமல் செய்வதற்குத் தகுதியானவையல்ல என்றும் ஒரே வாசகத்தை எழுதி இந்த மௌதூதி மேலாம்பரமான

Scanned by CamScanner

அந்த அரும் பெரும் பொக்கிஷங்களையெல்லாம் உதவாக்கரைகளென்று உதறித்தள்ளி விட்டார். (நஊது பில்லாஹ்)

பிக்ஹுக் கிதாபுகள் பற்றி மௌதூதியின் கருத்து.

பிக்ஹுக் கிதா புகள் பற்றி மௌதூதி சாஹிபின் கருத்தோ, எந்த மதுஹபுகளையும் ஏற்காத (முகல்லிதீன் அல்லாத)வர்களுடைய பொதுப்படைக் கொள்கையே தான். வெளிப்படையில் உள்ள வித்தியாசம் என்னவெனில் முகல்லிதீன் அல்லாதவர்கள் பிக்ஹுக்கிதாபுகளைக் கொண்டு அமல் செய்வது ஹறாம் என்று திறந்து சொல்லி விடுவார்கள். மௌதூதி சாஹிபோ அதே கருத்தை மழுப்பி, "சீர்திருத்தத்தை உத்தேசித்து பிக்ஹுக் கிதாபிலுள்ள மஸ்அலாக்கள் (சட்டதிட்டங்கள்) இக்காலத்தில் அமல் செய்வதற்குத் தகுதியற்றனவாக உள்ளன." என்று சொல்கிறார். இதுதான் வித்தியாசம். இதற்கு ஆதாரம் மௌதூதியின் பிரபல்ய நூலான தன்கீஹாத்தின் 70வது பக்கத்திலுள்ள இவ்வாசகம்:-

"ایک طرف ترکی قوم میں اتنے بڑے انقلاب کی ابتداء ہو رہی
تھی دوسری طرف ترکوں کے علماء اور مشائخ تھے جو اب بھی
ساتویں صدی کی فضا سے نکلنے پر آمادہ نہ تھے وہ اب بھی کہہ رہے
تھے کہ چوتھی صدی کے بعد اجتہاد کا دروازہ بند ہو چکا ہے وہ
اب بھی اصرار کر رہے تھے کہ ترکی قوم میں وہی فقہی قوانین نافذ
کئے جائینگے جو شامی اور کنز الدقائق میں لکھے ہوئے ہیں
(تنقیحات)

"ஒரு பக்கம் துருக்கி ஜனங்களில் இந்தப் பெரிய புரட்சி ஆரம்பம் ஆகிவிட்டது. மற்றொரு பக்கம்

துருக்கியிலுள்ள உலமாக்களும், மஷாயிகுமார்களும் - அவர்கள் அந்த (பழங்கால) ஏழாம் நூற்ருண்டின் முற்றவெளிலிருந்து புறப்படுவதற்கு இப்பொழுதுங்கூடத் தயாராக இல்லை. அவர்கள் இப்பொழுதும் சொல்கிருர்கள்: நாலாவது நூற்ருண்டிற்குப் பிறகு இஜ்திஹாதுடைய வாசல் அடைக்கப்பட்டுவிட்டதென்று. மேலும் அவர்கள் துருக்கி ஜனங்களில் ஷாமி, கன்ஸுத்தகாயிகிலுள்ள பிக்ஹுச் சட்டங்களையே நடைமுறையிலாக்கிக் கொள்ள வேண்டுமென்று இப்பொழுதும் பிடிவாதம் செய்து கொண்டிருக்கிருர்கள்."

வாசகர்களே: நன்ருகச் சிந்தித்துப் பாருங்கள். மௌதூதி சாஹிபு ஹனபி மதுஹபுடைய பிக்ஹுக் கிரந்தங்களில் பிரபல்யமான ஷாமி, கன்ஸுத்தாகாயிகு முதலியவைகளின் பெயர்களை எடுத்துச் சொல்லி ஹனபி பிக்ஹுவின் பேரில் தனது அதிருப்தியை வெளிப்படுத்துகின்ருர். அவரது தன்கீஹாத்திலுள்ள அவரது இவ்வாசகங்களைப் படித்துப்பார்த்து உணர்ந்ததற்கப்பால், மௌதூதி சாஹிபு, மதுஹபு எதையும் பின்பற்ருதவர்தான் என்பதில் யாதொரு சந்தேகத்திற்கும் இடமிருக்காது.

## மௌதூதிசாஹிபின் (மதுஹபுக்குக் கட்டுப்படாத) கொள்கை.

ஜமாஅதே இஸ்லாமியின் ஸ்தாபகர் ஜனுப் மௌதூதி சாஹிபு, தனது "தஜ்தீது வஇஹ்யாயேதீன்" (மார்க்கத்தைப்புதுப்பிப்பதும், உயிர்ப்பிப்பதும்) என்ற நூலின் 129ம் பக்கத்தில் கூறுகின்ற வாசகத்தின் சுருக்கம்:

Scanned by CamScanner

"جاہلیت جدیدہ بے شمار نئے وسائل کے ساتھ آئی ہے اور
اس نے بے حساب مسائل زندگی پیدا کر دیئے ہیں۔ لہٰذا کتاب
اللہ اور سنتِ رسول اللہ ہی وہ تنہا ماخذ ہے جس سے اس دور
میں تجدید ملت کا کام کرنے لئے رہنمائی حاصل کی جاسکتی ہے
اور اس رہنمائی کو اخذ کر کے اس وقت کے حالات میں شاہراہ
عمل تیار کرنے کے لئے ایسی مستقل قوت اجتہادیہ درکار ہے
جو مجتہدین سلف میں سے کسی ایک کے علوم ومنہاج کی پابند
نہ ہو" (تجدید ص ۱۲۹)

"புதிய மௌட்டீகம் எண்ணற்ற புது வழிவகைகளோடு வந்திருக்கிறது. மேலும் அது கணக்கில்லாத வாழ்க்கை சம்பந்தமான (மஸ்அலா) சட்டதிட்டங்களையும் உண்டாக்கி இருக்கின்றது. ஆகையால் அல்லாஹ்வின் வேதமும், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஹதீதும்தான் தனித்த முன் மாதிரியாகும் அதைக்கொண்டேதான் இக்காலத்தில் மார்க்கத்தைப் புதுப்பிப்பதற்கான நேரான வழிகாட்டுதலை உண்டாக்கிக் கொள்ள முடியும். மேலும், அந்த வழிகாட்டுதலை எடுத்துக்கொண்டு தான் இக்காலத்தின் நிலைமைகளில் ராஜபாட்டையையே தயார் செய்து கொள்வதற்கு முந்திய முஜத்திதீன்களில் எவருடைய அறிவுக்கும், போக்கிற்கும் கட்டுப்பட்ட வகையிலில்லாமல் தனிமையான முறையில் இஜ்திஹாது செய்யக்கூடிய சக்தி தேவைப்படுகிறது."

முஸ்லீம்களே! சிந்தித்துப்பாருங்கள். மௌதூதி சாஹிபு எப்படித்தெள்ளத்தெளிவாக இமாம்களைத் தொடராதிருப்பதற்கான எந்த மதுஹபுகளையும் ஏற்காதிருக்கும் முகல்லிது அல்லாதவருடைய பாடத்தை கற்றுத் தருகிறார் என்று. அத்தோடு, முந்திய முஜ்தஹிதீன்களில் எவர்களையும் தொடராது நீங்கி இருப்பதற்கு எப்படிப்பட்ட நவீன முறையாக வழியைக்காட்டுகிறார்.

அவர் மேலும் சொல்வதைப் பாருங்கள்;

"آخر میں ایک بات کی اور توضیح کر دینا چاہتا ہوں فقہ اور کلام (عقائد) کے مسائل میں میرا ایک خاص مسلک ہے جس کو میں نے اپنی ذاتی تحقیق کی بنا پر اختیار کیا ہے"

(رسالہ زندگی اگست و ستمبر ۱۹۵۰ء)

"இறுதியாக ஒரு விஷயத்தை இன்னமும் தெளிவு படுத்த வேண்டுமென்று விரும்புகிறேன். பிக்ஹு, கலாம் (அகீதா)களின் மஸ்அலாக்களில் எனக்கு தனிவழியுண்டு. அதை நான் என் சொந்த ஆராய்ச்சியைக் கொண்டு தெரிந்தெடுத்திருக்கிறேன்.

(ஜிந்தகீ மாசிகை - 1950 ஆகஸ்ட் - செப்டம்பர் வெளியீடு)

மௌதூதி சாஹிபுடைய இந்த வாசகத்திலுல் அவர் ஷாபி, ஹனபி, ஹன்பலி, மாலிக் ஆகிய நான்கு மதுஹபுகளில் எந்த மதுஹைபயும் சேர்ந்தவரில்லை; எந்த மதுஹபையும் பின் பற்றிய வருமில்லை என தெளிவாகிறது இவருக்கு தனியானதோர் மதுஹபு இருக்கின்றது. அதைத்தான் முஸ்லிம்கள் எந்த மதுஹபையும் பின்பற்றாத, முகல்லிதீன் அல்லாத, இமாம்களைப் பின்பற்றாத தன்மை என்று சொல்வார்கள். இதுவும் பகிரங்கமான விஷயம்.

இப்பொழுது மௌதூதி சாஹிபைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றும் மௌதூதியாக்களில் எவரேனும் ஜனாப்மௌதூதி சாஹிபு ஹனபி அன்றி ஷாபியீ அன்றி வேறு எந்த மதுஹபையாவது பின்தொடர்ந்தவர் என்று சொல்வதற்குத் துணிவார்களா? அவருடைய இமாம்களைப் பின்பற்றாத கொள்கையும், வஹ்ஹாபிக் கொள்கையையும் மறைத்து மூட முடியுமா?

Scanned by CamScanner

வணக்கங்கள் சம்பந்தமாக மௌதூதியின் சிந்தனை

மௌதூதிசாஹிபிடத்தில் விக்ரஹ ஆராதனைக் காரர்களின் ஆட்டமும், ஓட்டமும், தூக்கமும், விழிப்பும், உட்காருதலும், எழும்புதலும், உண்ணலும், 'பருகலும் எல்லாமே அல்லாஹ்வுக்குச் செய்யும் வணக்கமாகும். மேலும் அவர்கள் விக்கிரஹத்தை வணங்கிக் கும்பிடுதலும் கூட இவரிடத்தில் அல்லாஹ்வை வணங்குவதாகவே ஆகும். இவர் (மௌதூதி) "இஸ்லாத்தில் வணக்கத்தின் தோற்றம்" என்று தலையங்கம் இட்டு, தன்னுடைய 'தப்ஹீமாத்து" எனும் நூலின் 43வது பக்கத்தில் வணக்கத்தைப் பற்றிப் பின்வருமாறு விளக்கம் கொடுக்கின்றார்:-

وہ انسان خواہ خدا کا قائل ہو یا منکر، خدا کو سجدہ کرتا ہو یا
پتھر کو خدا کی پوجا کرتا ہو یا غیر خدا کی جب وہ قانون فطرت
پر چل رہا ہے اور اس قانون کے تحت ہی زندہ ہے تو لامحالہ
وہ بغیر جانے بوجھے بلا عمد و اختیار طوعاً و کرہاً خدا ہی کی عبادت
کر رہا ہے اسی کے سامنے سربسجود ہے اور اسی کی تسبیح میں لگا
ہوا ہے اس کا چلنا پھرنا سونا جاگنا کھانا پینا اٹھنا بیٹھنا
سب اسی کی عبادت ہے"

மனிதன் அல்லாஹ்வை நம்பினாலும் சரி, நிராகரித்தாலும் சரி; அல்லாஹ்வை பூசை செய்தாலும் சரி, அல்லாஹ் அல்லாத வற்றை பூஜை செய்தாலும் சரி எப்பொழுது அவன் இயற்கையின் விதிப்படி நடக்கிறானோ, அந்த விதியின் கீழ் வாழுகிறானோ, சந்தேகமின்றி அவன்

Scanned by CamScanner

தனக்குத் தெரியாமலே வேண்டுமென்றும், சுயேச்சையாகவும் இல்லாமல் வழிப்பட்டவனுகவும், நிர்ப்பந்தத்தில ானவனுகவும் அல்லாஹ்வையே (இந்த எல்லா நிலைகளிலும்) வணங்கிக் கொண்டிருக்கிறுன். அவன் முன்னுலேயே தலையை சாஷ்டாங்கத்தில் போட்டுக் கொண்டிருக்கிறுன். அவனுடைய தஸ்பீஹிலேயே இருக்கிறுன். மனிதனுடைய ஆட்டமும், ஓட்டமும், தூக்கமும், விழிப்பும், உண்ணலும், குடித்தலும், நிற்றலும் உட்காருதலும் அத்தனையுமே அவனுடைய (அல்லாஹ்வுடைய) வணக்கமேயாகும்.

இவ்வாறு கூறுகின்ற மௌதூதி ஸாஹிபுவேயாகட்டும், "அல்லது மௌதூதியத்தின் அபிமானிகளில் எவருமேயாகட்டும் மௌதூதி சாஹிபுக்கு முன்பதாக வேறுயாராவது வணக்கத்திற்கு இத்தகைய வியாக்கியானம் செய்திருக்கின்றுர்கள் என்று காண்பிக்க முடியுமா? அப்படி யாராவது, புத்தபகவானை-விக்கிரகத்தை வணங்குகிறவர்களின் தூக்கத்தையும், விழிப்பையும், ஆட்டத்தையும், ஓட்டத்தையும் அன்னவர்களின் அசைவையும், ஒடுங்குதலையும் அல்லாஹ்வின் இபாதத்து என்று சொல்லி இருக்கின்றுர்களா? வேறு எந்த ஒரு நபருமே இஸ்லாமிய இபாதத்துக்கு இத்தகைய (விபரீத) வியாக்கியானம் செய்யாதிருக்கும்போது இவருடைய இந்தப் பொறுப்பற்ற வியாக்கியானத்தைப் பற்றி, இஸ்லாமிய இபாதத்துக்கு அவருடைய மனஇஷ்டம் போல தனி அர்த்தம் கொடுத்து வியாக்கியானம் செய்கின்றுர் என்பதைத் தவிர்த்து வேறு என்ன சொல்லமுடியும். இத்தகைய வியாக்கியானத்தைச் செய்வதன் மூலம் (முஸ்லிமல்லாத) அந்நியர்களை திருப்தி செய்வதுவே இவரின் தேட்டமாகும். மௌதூதி சாஹிபுவின் இபாதத்தோ, முஸ்லிம்களோடு சேர்ந்து கொண்டால் 'அல்லாஹ்! அல்லாஹ்! என்பதுவும், பிராமணர்களோடு சேர்ந்து கொண்டால் ராம்! ராம்! என்று ஜண்டாக்கொடி தூக்குவதும்தான் என்பது தெளிவாகத் தெரிகிறது.

## மலாயிகத்துகள் பற்றி மௌதூதியின் கொள்கை

Scanned by CamScanner

மலாயிகத்துகள் பற்றி மௌதூதியின் கொள்கை விஞேதமானதும், விசித்திரமானதுமாகும். அவர் தனது பெருமைக்குரிய கோர்வையான "தஜ்தீது வஇஹ்யாயே தீன்" எனும நூலின் 14வது பக்கத்தில் சொல்கின்ருர்.

"اسلامی اصطلاح میں جس کو فرشتہ کہتے ہیں وہ تقریباً وہی
چیز ہے جس کو یونان و ہندوستان وغیرہ ممالک کے مشرکین
نے دیوی یا دیوتا قرار دیا ہے۔ (تجدید ص ۱۴)

"இஸ்லாமிய (இஷ்திலாஹ்) பரிபாஷையில் எதற்கு மலக்குகள் என்று சொல்கின்ருர்களோ அது ஏறக்குறைய யூனன், இந்துஸ்தான் மற்றும் தேசங்களிலுள்ள (முஷ்ரிகீன்கள்) இணைவைப்பவர்கள் தேவன், தேவதை என்று சொல்கின்ருர்களே, அவையேதான்."

சங்கையான வாசகர்களே! சொல்லப்பட்ட மௌதூதியின் இந்தக் கருத்தைத் தெரிந்து கொண்ட பின்னர், இப்பொழுது திருக்குர்ஆன் போதனைப்படியுள்ள ஸுன்னத்துவல் ஜமா அத்து முஸ்லிம் பெருமக்களின் கருத்தையும் கவனியுங்கள்: அல்லாஹ் ஸுப்ஹான ஹூவத்தஆலா திருவுளமாகின்ருன் :

لَا يَعْصُونَ اللَّهَ مَا أَمَرَهُمْ وَيَفْعَلُونَ مَا يُؤْمَرُونَ
بَلْ عِبَادٌ مُّكْرَمُونَ لَا يَسْبِقُونَهُ بِالْقَوْلِ وَهُم
بِأَمْرِهِ يَعْمَلُونَ ؕ

"(மலாயிக்கத்துகள்) அல்லாஹ்உடைய கட்டளைக்கு மாறு செய்யவே மாட்டார்கள். அவர்களுக்கு ஏவப்பட்டதையே செய்வார்கள். எனினும், அவர்கள் அவனுடைய சங்கையான அடியார்களேயாகும். பேச்சில் அவனுக்கு முந்தவே மாட்டார்கள். மேலும் அவர்கள் அவனுடைய கட்டளைப் பிரகாரமே நடப்பார்கள்."

Scanned by CamScanner

இவ்விரு ஆய்த்துக்களினுலும் மலக்குகள் சங்கைக்குரியவர்கள். பரிசுத்தமானவர்கள் என்பதாகத் தரிபடுகின்றது. இதுதான் ஸுன்னத்துவல் ஜமாஅத்தாரின் கொள்கையுமாகும். (முஷ்ரிகீன்) இணை வைப்பவர்களுடைய தேவன், தேவதை பற்றி சங்கையான குர்ஆனின் போதனை விளக்கம். வருமாறு:-

إِنَّكُمْ وَمَا تَعْبُدُونَ مِنْ دُونِ اللَّهِ حَصَبُ جَهَنَّمَ

"நிச்சயமாக (முஷ்ரிக்கீன்களாகிய) நீங்களும், அல்லாஹ்வையன்றி (ஷிர்க் வைத்து) நீங்கள் வணங்கக் கூடியவைகளும் நரகத்தின் எரி கொள்ளிகளாகும்."

"இப்பொழுது வாசகர்கள் சிந்தித்து உணரவேண்டும். குர்ஆனுல் ஹக்கீம் ஒருபுறம் மலாயிக்கத்துகளை அல்லாஹ்வுக்கு வழிப்பட்ட சங்கைக்குரிய நல்லடியார்களாகவும், பாவச் செயல்களை விட்டும் பரிசுத்தமானவர்களாகவும் காட்டுகின்றது; மற்றொருபுறம் முஷ்ரிகீன்களும் அவர்கள் வணங்கக்கூடியவைகளும் நரகத்தின் எரிகொள்ளிகள் என்று திருமறை தீர்ப்புச் சொல்கிறது.

"இந்நிலையில் மௌதூதி சாஹிபு மலாயிக்கத்துகளை, முஷ்ரிக்கீன்கள் கும்பிடும் தேவி, தேவதா என்றோ அல்லது முஷ்ரிகீன்கள் கும்பிடும் தேவி, தேவதாவை மலாயிக்கத்துகள் என்றோ முடிவு செய்வது எங்ஙனம் பொருந்தும்?

## களா கத்ரைப் பற்றி மௌதூதியின் கருத்து

களா கத்று அல்லாஹ்வின் புறத்திலுள்ளது என்று ஈமான் கொள்வது அத்தியாவசியம் எனவும், அதற்கு மாற்றமாக நினைப்பது வழிகேடு எனவும், இதனை மறுத்துக்கூறுவது குப்று எனவும் ஒவ்வொரு முஸ்லிமும் நன்கு அறிவார்கள். ஆனால் மௌதூதி சாஹிபுவோஸுன்னத்து வல் ஜமாஅத்துப் பெருமக்களை விட்டும் அப்பாற்பட்டு அலாதியாகக் காணப்படுகின்றார். அவருடைய கொள்கையும், கருத்தும் களா கத்றின் பேரில்

Scanned by CamScanner

ஈமான் கொள்ளவேண்டியது அவசியமில்லை என்பதாகும்.' அவர் தனது "மஸ்அலா ஜப்று கத்று" எனும் நூலின் 9வது பக்கத்தில் எழுதுகிறார்:-

"ہر چند میرے نزدیک مسئلہ قضاو قدر جزو ایمان نہیں ہے اور اس کی حیثیت ایک مسئلہ کی ہے"۔ (مسئلہ جبر و قدر)

எந்த விதத்தாலும் என்னிடத்தில் களா கத்றுடைய மஸ்அலா ஈமானுடைய பாகத்தைச் சேர்ந்தது அல்ல. மேலும் அதன் நிலைமை (ஈமானோடு சம்பந்தமில்லாத, தனிப்பட்ட) ஒரு மஸ்அலாவின் நிலைமையே ஆகும்".

மௌதூதி சாஹிபின் இந்த வாக்கியம் மிக எளிதாகவும் லேசானதாகவும் உள்ளது. இதைப் படித்துப் பார்த்து ஒரு சாதாரண அறிவுள்ள மனிதனும் கூட மௌதூதி சாஹிபிடத்தில் களா கத்ரைக் கொண்டு ஈமான் கொள்ள வேண்டியது அவசியமில்லை என்பதாக வெகு இலகுவாக விளங்கிக் கொள்வான்.

ஸுன்னத்து வல்ஜமாஅத்து முஸ்லிம்களோ களா, கத்று அல்லாஹ்வின் புறத்திலுள்ளது என்று உறுதியாக ஈமான் கொண்டிருக்கின்றார்கள். குர்ஆன் ஷரீபிலும் வந்துள்ளது :

قُلْ كُلٌّ مِّنْ عِنْدِ اللهِ

"நபியே, யாவுமே அல்லாஹ்வில் நின்றுமுள்ளது எனச் சொல்வீராக."

இதுமட்டுமல்லாமல், இன்னும்பல நூற்றுக்கணக்கான ஆயத்துக்களும், களா கதர் அல்லாஹ்வின் புறத்தாலுள்ளது என்று அறிவித்துக் கொண்டிருக்கின்றன. களா கதர் அல்லாஹ்வின் புறத்தாலுள்ளது என்று ஈமான் கொள்கிற வரையிலும் அடியான் முஃமினாக முடியாது என்று ஸஹீஹான ஹதீதுகளிலும் நன்கு தரிப்படுத்தப் பட்டுள்ளது.

Scanned by CamScanner

புஹாரி, முஸ்லீம் முதலிய ஸஹீஹான ஹதீதுக் கிரந்தங்களில் ஹளரத்து பாரூக்கே அஃளம் உமர் ரலியல்லாஹீஅன் ஹி அவர்களைத் தொட்டும் ஹதீது ரிவாயத்துச் செய்யப்படுகின்றது.

ஜிப்ரீலே அமீன் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் றசூலே கரீம் நாயகம் அவர்களின் சமுகத்தில் வந்து கேட்டது :-

اَخْبِرْنِيْ عَنِ الْاِيْمَانِ قَالَ اَنْ تُؤْمِنَ بِاللّٰهِ وَ
مَلٰئِكَتِهٖ وَكُتُبِهٖ وَرُسُلِهٖ وَالْيَوْمِ الْاٰخِرِ وَ
تُؤْمِنَ بِالْقَدْرِ خَيْرِهٖ وَشَرِّهٖ (بخاری ومسلم)

எனக்கு ஈமானைப்பற்றி அறிவித்துத் தாருங்கள் என்று ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் சொன்னார்கள். நாயகம் ஸல்லல்லாஹீ அலைஹிவஸல்லம் சொன்னார்கள். நீங்கள் அல்லாஹ்வைக் கொண்டும், அவனது மலாயிக்கத்துகளைக் கொண்டும், அவனது வேதங்களைக் கொண்டும், அவனது தூதர்களைக் கொண்டும், ஒடுக்கத்து நாளைக்கொண்டும், இன்னும் நன்மை., தீமைகள் யாவும் அவனுடைய (கதர்) கற்பனையைக் கொண்டுள்ளது என்றும் ஈமான் கொள்வதாகும்."

ஹளரத்து அலி ரலியல்லாஹீதஆலாஅன்ஹீ அவர்களைத்தொட்டும் இந்த ஹதீது ரிவாயத்துச் செய்யப்படுகிறது. ஸெய்யிதுல் ஆலம், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹீ அலைஹிவஸல்லம் அவர்கள திருவுளம் பற்றியுள்ளார்கள்.

لَا يُؤْمِنُ عَبْدٌ حَتّٰى يُؤْمِنَ بِاَرْبَعٍ يَشْهَدُ اَنْ لَا
اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَنِّيْ رَسُوْلُ اللّٰهِ بَعَثَنِيْ بِالْحَقِّ وَيُؤْمِنُ
بِالْمَوْتِ وَيُؤْمِنُ بِالْبَعْثِ بَعْدَ الْمَوْتِ وَيُؤْمِنُ
بِالْقَدْرِ (اخرجه الترمذی وابن ماجه واللفظ له)

Scanned by CamScanner

"அடியான் நான்குகருமங்களைக்கொண்டு ஈமான் கொள்ளுகின்றவரையிலும் முஃமினுக மாட்டான். அவை (1) அல்லாஹ்வையன்றி வணக்கத்துக்குப் பாத்திரமான நாயன்யாருமில்லை எனவும், நான் அல்லாஹ்வின் றசூல் எனவும், என்னை அவன் சத்தியத்தைக் கொண்டு தூதராக அனுப்பியிருக்கிருன் என்றும் சாட்சி சொல்ல வேண்டும். (2) மரணத்தைக் கொண்டு ஈமான் கொள்ளவேண்டும். (3) மரணத்திற்கப்பால் எழுப்பப்படுதல் உண்டு என ஈமான் கொள்ளவேண்டும். (4) (கத்ர்) கற்பனையைக் கொண்டு ஈமான் கொள்ளவேண்டும்". (இந்த ஹதீதை இமாம் திர்மிதி (ரஹ்) இபனுமாஜா (ரஹ்) ரிவாயத்துச் செய்திருக்கிருர்கள். வாசகம் இப்னுமாஜா (றஹ்) இபனுமாஜா (ரஹ்) ரிவாயத்துச் செய்திருக்கிருர்கள். வாசகம் இப்னுமாஜா (றஹ்)வுக்கு உரியது.)

இவைதவிர இன்னமும் அநேகமான சஹீஹான ஹதீதுகளும், ரிவாயத்துகளும் உள்ளன. அவற்றைக்கொண்டு மனிதன் எதுவரையிலும் களாகத்ரின் பேரில் ஈமான் கொள்ளவில்லையோ அதுவரையிலும் அவன் முஃமினுக ஆகமுடியாது என்பது பட்டப்பகலில் சூரியனைப்போல் தெளிவாக விளங்குகின்றது.

மார்க்கக் கல்வியை போதிக்கக்கூடிய எதாவது ஒரு மத்ரசாவில் ஹதீதுக் கிரந்தங்களை ஓதிக் கொடுக்கக்கூடிய ஒரு ஸுன்னி ஆலிமிடத்தில், ஒவ்வொரு பாடமாக ஹதீதைப் படித்து ஓதிக் கொள்வதற்கு ஐனுப் மௌதூதி சாஹிபுக்கு என்றும் முடிந்திருக்கவில்லை. ஆங்கிலக் கல்லூரிகளிலும், பாடசாலைகளிலும் படித்துக் கொடுக்கக் கூடிய ஜோலிதான் அவருக்கு முறையாக ஹதீதுகளை நன்கு நோட்டமிடுவதற்கு அவகாசம் அளிக்காமல் விட்டிருக்க வேண்டும். ஆனுல்.

وَالْقَدْرِ خَيْرِهٖ وَشَرِّهٖ مِنَ اللّٰهِ تَعَالٰى وَالْبَعْثِ بَعْدَ الْمَوْتِ -

"நன்மை தீமை அல்லாஹ்வின் (களாகத்ர்) கற்பனையிலுள்ளது எனவும், மரணத்திற்குப் பின்பு எழுப்பப்படும் எனவும் ஈமான் கொண்டேன்" என்ற வாசகம் பொருந்திய ஈமான் முபஸ்ஸலின் வசனமும் - அதாவது "அல்லாஹ்வைக் கொண்டும், அவனுடைய மலாயிக்கத்துகளைக் கொண்டும், அவனுடைய வேதங்களைக் கொண்டும், நன்மை தீமை அல்லாஹ்வின் கற்பனையிலுள்ளது என்பதைக் கொண்டும், மரணத்துக்குப் பின் எழுப்பப்படும் என்பதைக் கொண்டும் ஈமான் கொண்டேன்" என்ற வசனமும் கூட அவருடைய கவனத்தில் வரவில்லையென்று சொல்வதானது ஒப்புக்கொள்ள முடியாத ஒரு விஷயமாகும்.

மௌலூதி ஸாகிபு மேலே சொல்லப்பட்டதனது நூற்களில் தனது. கொள்கையையும், கருத்தையும் வெளிப்படுத்திவிட்டு நமது ஸுன்னத்துவல ஜமாஅத்து இமாம்களையும் சும்மா விடவில்லை. அவர்களது சமூகங்களைப் பற்றி, தான் விரும்பியது போலெல்லாம் சொல்லியிருக்கிறார். தான் நாடிய படியெல்லாம் அவர்களைப்பற்றி வீண் தாவாவும் குதர்க்க வாதமும் பேசி இருக்கின்றார். இமாம் பகுறுத்தின் ருசீ அவர்களின் தப்ஸீர் கபீரை ஜப்ரிய்யாக் கூட்டங்களுக்கு வன்மைமிக்க வக்கீலாக ஆக்கினார்; அவர் மீது இழுக்கைப் போட்டார். ஒரு இடத்தில் அஷ்அரிய்யாக்களுடைய ஆதாரங்களை இது அப்பட்டமான "ஜப்று" என்று தரிப்படுத்துகிறார். இன்னுமொரு இடத்தில் முதகல்லி மீன்கள் ரஹ்மத்துல்லாஹ் அலைஹிம்அவர்களை வேலையில்லாதவர்கள், உதவாக்கரைகள் என்கின்றார். ஆகையால், இந்நிலைமையில் மௌலூதியாக்கள்தங்களுடைய குரு மௌலூதி சாஹிபுடைய இக்கருத்தும், கொள்கையும் ஸுன்னத்துவல் ஜமாஅத்துக் கொள்கைகளுக்கு விரோதமானதாக அல்லாமல் வேறு என்ன என்பதை தாங்களே முடிவு செய்யட்டும்.

## இமாம் மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் அவர்களைப்பற்றி மௌலூதியின் கருத்து

மௌலூதி சாஹிபு தனது "தஜ்தீது வஇஹ்யாயேதீன்" எனும் நூலின் 45 வது பக்கத்தில் இமாம் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய வருகையைப்பற்றி

Scanned by CamScanner

பேசும் பொழுது முதலாவதாக பொதுமக்களின் கருத்தை வெளிப்படுத்துகிறுர். அத்தோடு மௌதூதி, ஸூபி, தஸ்பீஹ்றதைக்கா முதலியவைகளைப் பற்றியும், மற்றும் ஆத்மீக 'தத்துவ ஆட்சிகளைப்பற்றியும் பரிகாசம், கிண்டல் செய்துவிட்டு, அதற்கடுத்து ஹளரத் இமாம் மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வருகை சம்பந்தமாக தனது கருத்தை இவ்வாறு வெளியிடுகின்றுர்.

"میرا اندازہ یہ ہے کہ آنے والا اپنے زمانہ میں بالکل جدید
ترین طرز کا لیڈر ہوگا۔ بلکہ شاید اسے خود بھی اپنے مہدی موعود
ہونے کی خبر نہ ہوگی مہدیت دعویٰ کرنے کی چیز نہیں کر کے
دکھانے کی چیز ہے۔ مجھے اس کے کام میں کرامات و خوارق
کشوف والہامات اور چلّوں اور مجاہدوں کی کوئی جگہ نظر نہیں
آتی وہ خالص اسلام کی بنیادوں پر ایک نیا مذہب فکر پیدا
کرے گا۔ (تجدید ص ۴۵)

"என்னுடைய கருத்து இதுவேயாகும். அதாவது வரக்கூடியவர் (மஹ்தீ) தனது காலத்தில் பூரணமாக புதுமுறையான ஒரு லீடராக இருப்பார். மேலும் அவருக்கு, அவரேதான் மஹ்தீ என்பதுவும் தெரியாமலிருக்கக் கூடும். மஹ்தீவிஷயம் தாவாச்செய்யக்கூடிய விஷயமல்ல. செய்து காட்டக்கூடிய விஷயமாகும். இந்த விஷயத்துக்குக் கருமாத்து, ஹவாரிகுல் ஆதாத்து, கஷ்பு, இல்ஹாம், சில்லா, ஜபதம் எதுவும் அவசியம் என்பதாக ஒரு வகையிலும் எனக்குத் தென்படவில்லை. அவர் ஒரு சுத்தமான இஸ்லாத்தின் அடிப்படையின் பேரில் ஒரு புது மத்ஹபின் சிந்தனையை உண்டாக்குவார்."

Scanned by CamScanner

ஹளரத்து இமாம் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு விலாயத்தும், குத்பியத்தும் உண்டாகும் என்பதன் பேரில் சங்கைமிகு முஹத்திதீன்களெல்லாம் ஏகோபித்து உரைத்துள்ளார்கள். இந்த உம்மத்திலுள்ள அப்தால்கள் இமாம் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் திருக்கரத்தில் 'பைஅத்து' செய்வார்கள் என்று ஸஹிஹான ஹதீதுகளில் வந்துள்ளது. இதன் மூலம் இமாம் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வொலி என்பது தெளிவாகின்றது. இந்த வொலியுல்லாஹ்வின் வேலையில் மௌதூதி சாஹிபுக்கு கஷ்பு, கறாமாத்தின் இடமும் தெரியவில்லை. இல்ஹாம், ரியாளத்தின் அடையாளமும் கிடைக்கவில்லை. எப்படித் தெரியும்? எப்படிக் கிடைக்கும்?

"அல்லாஹ் எவனுக்கு ஒளிப்பிரகாசத்தை அளிக்கவில்லையோ அவனுக்கு (வேறு) ஒளிப்பிரகாசமே கிடையாது."

## கண்ணியமிக்க ஸூபியாக்களின் நிலைமை பற்றி ஜனாப் மௌதூதியின் கருத்து

சங்கைமிக்க ஸூபிய்யாக்களுடைய அவுராது, வளீபா, ரியாளத்து, முகாஷபா முதலிய அமல்களின் ஹீஸ்புகளைப் பற்றி, மௌதூதி சாஹிபு தனது "தஜ்தீது வஇஹ்யாயேதீன்" எனும் நூலின் 23/24வது பக்கங்களில் எழுதி இருப்பதைப் பாருங்கள்.

اس ذہنیت نے انبیاء کی امتوں میں سے ایک گروہ کو مراقبہ مکاشفہ، چلّہ کشی، ریاضت اوراد و وظائف احزاب و اعمال کے چکر میں ڈال دیا اور مستحبات و نوافل کے انتظام میں فرائض سے بھی زیادہ منہمک کر کے خلافۃ اللہ کے اس کام سے غافل کر دیا۔ (تجدید صـ ۲۲ و ۲۳)

"இந்தப் புத்தியாகின்றது நபிமார்களுடைய உம்மத்துக்களில் ஒரு கூட்டத்தாரை முருக்கபா, முஷாஹதா, சில்லா, ரியாளத்து, ஹிஸ்பு (அமல்களையும், ஓதல்களையும் நியமமாகக் கொண்டுவரக்கூடிய) வளீபாக்களுடைய மயக்கத்தில் போட்டு விட்டது. இன்னமும் பர்ளுகளைவிடவும் அதிகமாச முஸ்தஹப்புகளை பேணுவதில் மூழ்கச் செய்து அல்லாஹ்வின் கிலாபத்தின் இந்த (மௌதூதியின் திட்டப்படியுள்ள) வேலையை மறக்க வைத்து விட்டது."

சிந்தியுங்கள்! முகாஷபா, முருகபா, ரியாளத்து, முஜாஹதாக்களையெல்லாம் மௌதூதி சாஹிபு மருட்சிக்குரிய காரணங்களாகக் காட்டிச் சொல்லி சங்கையான அவுலியாக்கள், வலுப்பமான ஸூபிய்யாக்கள் உடைய ஹளரத்துக்களின் பேரில் எப்படி மருட்சியெனும் கறையைப் போடுகின்றார். இன்னமும் அவர்களின் பேரில் முஸ்தஹப்பு, நபிலுகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். பர்ளானவைகளை விட்டும், அவற்றிலேயே மூழ்கிக் கிடக்கின்றார்கள் என்பதாகத் தாவாச் செய்து முஸ்லிம்களை முஸ்தஹப்பு, விட்டிழந்து இருப்பதற்கு ஆசையூட்டுகின்றார்.

## பீர், முரீது (குரு,சீடன்) சம்பந்தமாக மௌதூதியின் கருத்து

ஜனாப் மௌதூதி சாஹிபு மற்றும் எல்லா முகல்லிது அல்லாதவர்களைப் போலவே, வஹ்ஹாபிகளைப் போலவே பீர், முரீது சம்பந்தமாகவும், பைஅத்து, இருதத்து (ஞானதீட்சை)பேரிலும் கடுமையான விரோதங் கொண்டிருப்பதுமல்லாமல் அவற்றை ஷிர்க்குடைய ஸ்தானத்திலேயே கருதவும் செய்கின்றார். தனது 'தஜ்தீது வஇஹ்யாயே தீன்' என்ற நூலின் 114வது பக்கத்தில் அவர் கூறுகின்றார்:

Scanned by CamScanner

• بیعت کا معاملہ پیش آنے کے بعد کچھ دیر نہیں لگتی کہ مریدوں
میں وہ ذہنیت پیدا ہونی شروع ہو جاتی ہے جو مریدوں کے
ساتھ مختص ہو چکی ہے۔ یعنی "بہ مے سجادہ رنگیں کن گرت پیر
مغاں گوید" والی ذہنیت جس کے بعد پیر صاحب اور ارباب
من دون اللہ میں کوئی فرق باقی نہیں رہ جاتا۔" فکر و نظر مفلوج
قوت تنقید ماؤف، علم و عقل کا استعمال موقوف۔ اور
دل و دماغ پر بندگی شیخ کا ایسا مکمل تسلط کہ گویا شیخ
ان کا رب ہے ۔" (تجدید ص۱۱۴)

"பைஅத்தின் விவகாரம் நடந்தபின்னர் சிறிது நேரம் கூடச் செல்லாது. முரீதீன்களுக்கே சொந்தமானதோர் புத்தி முரீதில் உண்டாக ஆரம்பித்து விடுகின்றது அதாவது, 'மதுபானத்தைப்புகட்டக்கூடியவரே என்று கூப்பிட்டுக் கொண்டே (விரிப்பில் மதுவைச் சிந்தி) விரிப்பின் மதுவின் நிறமாக ஆக்கிவிடு' என்ற புத்தி அதற்கப்பால் ஓர் ஸாஹிபுக்கும், அர்பாபுன் மின் தூனில்லாஹீ (அல்லாஹ் அல்லாத நாயன்) களுக்குமிடையில் யாதொரு வித்தியாசமும் எஞ்சியிராது. சிந்தனையும் ஆலோசனையும் சோர்ந்துவிடும். அலசிப்பார்க்கும் சக்தி பூஜ்யமாகி விடும். புத்தியும், அறிவும் தடைப்பட்டு விடும். ஷெய்கு அவனுடைய ஆண்டவன் எனும் அளவுக்கு ஷெய்கு செய்யும் ஊழியம் இவனுடைய இருதயத்திலும் மூளையிலும் அடர்ந்தேறிவிடுகிறது.

இதைத் தொடர்ந்து மௌதூதி சாஹிபு அதே நூல் அதே பக்கத்தில் ஹளரத்து முஜத்திது அல்பதானி ரஹிமஹுல்லாஹ் பற்றியும், ஷாஹ் வலியுல்லாஹ் ரஹிமஹுல்லாஹ் பற்றியும் அலசிப் பார்த்து எழுதுகிறார்.

Scanned by CamScanner

"مسلمانوں کے اس مرض سے نہ حضرت مجدد صاحب ناواقف تھے نہ شاہ صاحب مگر غالباً اس مرض کی شدت کا انھیں پورا اندازہ نہیں یہی وجہ ہے کہ دونوں بزرگوں نے ان بیماروں کو پھر وہی غذا دے دی جو اس مرض میں مہلک ثابت ہو چکی ہے۔

(تجدید ص ۱۱۴)

"முஸ்லிம்களுடைய இவ்வியாதிபற்றி ஹளரத்து முஜத்திது ஸாஹிபு விளங்காமல் இல்லை. ஷாஹ்ஸாஹிபுக்கும் தெரியாமல் இல்லை ஆனால் அநேகமாக இவ்வியாதியின் கொடூரத்தைப் பற்றி அவர்களுக்குப் பூரணமாக நிதானப்பட வில்லை. இதே காரணம்தான் அவ்விரு பெரியார்களும் அவ்வியாதியஸ்தர்களுக்குத் திரும்பவும், அதே உணவைக் கொடுத்தார்கள். அது (அவர்களுடைய வியாதியை சொஸ்தப் படுத்துவதற்குப் பதிலாக அவர்களை) அவ்வியாதியிலேயே கொல்லக் கூடியதாக ஆக்கிவிட்டது.

கடைசியாக மௌதூதி சாஹிபு யோசனை சொல்லும் முகமாக மேற்படி நூல் 116ம் பக்கத்தில் எழுதுகின்றார்.

"اب جس کسی کو تجدید دین کے لئے کوئی کام کرنا ہو اس کے لئے لازم ہے کہ متصوفین کی زبان و اصطلاحات. رموز و اشارات لباس پیری مریدی اور ہر اس چیز سے جو اس طریقہ کی یاد تازہ کرنے والی ہو مسلمانوں کو اس طرح پرہیز کرائے جس طرح ذیابطیس کے مریض کو شکر سے پرہیز کرایا جاتا ہے۔

(تجدید ص ۱۱۶)

Scanned by CamScanner

"இப்பொழுது யாரும் மார்க்கத்தைப் புதுப்பிப்பதற்காக ஏதும் வேலை செய்ய வேண்டியதாக இருந்தால் ஸூபியாக்களுடைய வார்த்தைகளையும், பரிபாஷைகளையும், அவர்களுடைய சயிக்கினைப் (இஷாரு) பேச்சுகளையும், பீர்தன்மை, முரீதுத்தன்மையின் போர்வையையும், இன்னும் தரீக்கா(வழி) பற்றிய ஆசையைக்கிளப்பக் கூடிய எல்லாச்சங்கதிகளையும் விட்டு நீரழிவுக்கார வியாதியஸ்தனை சர்க்கரை தின்னக்கூடாதென்று எவ்வாறு விலக்க வேண்டுமோ அவ்வாறே முஸ்லிம்களையும் (இக்கருமங்களை விட்டும்) விலக்க வேண்டியது அவர்மீது கடமையாகும்.

"புத்திமான்கள் சிந்திக்க வேண்டும். வஹ்ஹாபிகளில் ஒரு கூட்டத்தினரான முகல்லிது அல்லாதவர்கள் பீர், முரீ துத்தன்மை கெட்டது என்று மாத்திரமே கருதுகின்றுர்கள். ஆனுல் மௌதூதி சாஹிபோ அவர்களை விட இன்னமும் நாலடி முன்னே பாய்கின்றுர். மேதைகளான ஷெய்குமார்களுடைய நடைபடி; பழக்க வழக்கங்களையும், அவர்களின் சயிக்கினைகளையும் பரிபாஷைகளையும் கூட அதிருப்பதியுடன் நோக்கி அவற்றையெல்லாம் விட்டு முஸ்லிம்கள் தப்பித்து, அகன்றிருக்க வேண்டுமென இவர் யோசனை கூறுகின்றுர்.

## பாத்திஹா, நேர்ச்சை, நிய்யத்து சம்பந்தமாக மௌதூதியின் கருத்து

ஜனுப்மௌதூதி சாஹிபு நேர்ச்சை, நிய்யத்து, பாத்திஹா, ஜியாரத்து, கந்தூரி முதலியவைகளையெல்லாம் இணைவைப்பவர்களுடைய (முஷ்ரிகீன்களுடைய) பூஜைகள் எனக்காட்டும் தோரனையில் "முஷ்ரிகீன்களின் சாபக்கேடு," எனும் தலையங்கத்தின் கீழ் நீண்டதோர் கட்டுரையை

Scanned by CamScanner

எழுதியிருக்கின்றார். இதிலிருந்து இவரின் தப்பும் தவறுமான விபரீத வியாக்கியானத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம். அவருடைய "தஜ்தீது வஇஹ்யாயே தீன்" எனும் நூலின் 11வது பக்கத்தில் அவர் வரைந்துள்ளார்:-

"جاہلیت خالصہ کے بعد یہ دوسری قسم کی جاہلیت ہے جس میں انسان قدیم ترین زمانہ سے آج تک مبتلا ہوتا رہا ہے اور ہمیشہ گھٹیا درجہ کی دماغی حالت ہی میں یہ کیفیت رونما ہوئی ہے انبیاء علیہم السلام کی تعلیم کے اثر سے جہاں لوگ اللہ واحد قہار کی خدائی کے قائل ہو گئے وہاں سے خداؤں کی دوسری اقسام تو رخصت ہو گئیں. مگر انبیاء. اولیاء شہداء صالحین مجاذیب. اقطاب. ابدال. علماء مشائخ اور ظل اللہوں کی خدائی پھر بھی کسی نہ کسی طرح عقائد میں اپنی جگہ نکالتی ہی رہی جاہل دماغوں نے مشرکین کے خداؤں کو چھوڑ کر ان نیک بندوں کو خدا بنالیا" (تجدید ص۱۱)

"சுத்த மட்டித்தனத்திற்குப்பின்பு இது மற்ருெரு வகையான மட்டித்தனமாகும். இதைக் கொண்டு மனிதன் பூர்வீக காலத்தில் இருந்து இன்று வரையிலும் சோதிக்கப் பட்டவனுகவே இருக்கின்ருன்" மேலும் எப்பொழுதும் மட்டரகமான புத்தியிலேயே இந்நிலை தோற்றமளித்துக் கொண்டிருக்கிறது. நபிமார்களின் போதனையின் குணப்பாட்டினுல் எங்கு ஜனங்கள் அல்லாஹுல் வாஹிதுல் கஹ்ஹாரையே ஆண்டவன் என்று சொல்லிக் கொண்டிருந்தார்களோ அங்கிருந்து ஏனைய

தெய்வங்களெல்லாம் போய்விட்டன. ஆனால் அன்பியா, அவுலியா, ஷுஹதா, ஸாலிஹீன், மஜ்தூபுகள், குத்புமார்கள், அப்தால்கள், உலமாக்கள், ஷெய்குமார்கள் ஆகியவர்களையும், அல்லாஹ்வின் நல்லடியார்களையும் ஆண்டவனைக் கருதுவது திரும்பவும் ஏதோ ஒரு கொள்கையில் தனது (ஷிர்க்குடைய) ஸ்தானத்தை எடுக்கவே செய்கின்றது புத்தியில்லா மடையர்கள் முஷ்ரிகீன்களுடைய தெய்வங்களை விட்டுவிட்டு இந்த நல்லடியார்களைத் தெய்வங்களாக ஆக்கிவிட்டார்கள்".

இந்த இடத்தில் ஜனுப் மௌதூதி சாஹிபு எல்லா வஹ்ஹாபிகளையும் போலவே வீண் வாதத்திலும், தவறான வியாக்கியானம் செய்யும் வேலையிலுமே இறங்கி விட்டார். மேலும் ஸுன்னத்துவல் ஜமாஅத்து முஸ்லிம்கள், அல்லாஹ்வின் மெய்யன்பர்களான நல்லடியார்களை எல்லாம் தெய்வங்களாக ஆக்கிவிட்டார்களென்று அபவாதங்களைக் கூறி வாதிடுகிறார். இவருடைய இந்தத்தாவா சுத்தத் தவாறானதும் பகிரங்கமான படுதூறுமாகும். எந்த முஸ்லிம் நபிமார்களின் நாயகம்ஸெய்யிதுல் அன்பியா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களையும் கூட அல்லாஹ் என்று நம்பி விசுவாசிக்காமல் அவர்களை அல்லாஹ்வுடைய திருத்தூதராகவும், அடியாராகவுமே நம்பி விசுவாசிக்கின்றானோ, அவன் எந்த கௌதையும் குத்பையும், வேறு எந்தப் பெரியாரையும் எங்ஙனம் தன்னுடைய நாயன் என்று அல்லாஹ்வுக்கு இணைவைத்து விசுவாசிப்பான்? இக்கூற்று வஹ்ஹாபிகளின் பழைய வழிகேடான பல்லவியாகும். அதாவது அல்லாஹ்வின் நல்லடியார்களை அவனது மெய்யன்பர்கள் என்று நம்புவதை, அவர்களை ஆண்டவன் என்று நம்புவதாக (அபவாதப் படுதூறு) கூறுகின்றார், இதே அடிப்படையில்தான் வஹ்ஹாபிகளின் இந்தியத் தலைவர், மௌலவி இஸ்மாயில் திஹ்லவிதனது 'தக்வியதுல் ஈமான்' எனும் நூலில் இடத்துக்கு இடம் அல்லாஹ் ஒருவனையே

(ஈமான்) விசுவாசம் கொள்ளுங்கள், வேறு எவரையும் விசுவாசம் கொள்ளாதீர்கள் என்று வலியுறுத்திக் கூறுகின்றார். சங்கையான குர்ஆனிலோ எப்படி அல்லாஹ்வை நாயன் என்று நம்பிக்கை கொள்ளும்படி கட்டளை வந்திருக்கின்றதோ, அதேபோல அல்லாஹ்வின் நல்லடியார்களை அவனது பக்தர்கள், மெய்யன்பர்கள் என்று விசுவாசம் கொள்ளும்படியாகவும் கட்டளை வந்துள்ளது.

"செலாவணியில்லாக் கொள்கைகளை விட்டும், கெட்ட சிந்தனைகளை விட்டும் அல்லாஹ்வைக் கொண்டு காவல் தேடுகின்றோம்."

மேலும் மௌதூதி சாஹிபு தனது சிந்தனைக்குத் தோதாக தெய்வீக லட்சணங்களை முவ்வகையாக விபரித்து பின்வருமாறு தனது "தஜ்தீது வஇஹ்யாயே தீன்" நூலின் 15வது பக்கத்தில் எழுதுகின்றார்:-

"ایک طرف مشرکانہ پوجا پاٹ کی جگہ فاتحہ۔ زیارات۔ نیاز۔ نذر۔ عرس۔ صندل۔ چڑھاوے۔ نشان۔ عَلَم تعزیے اور اسی قسم کے دوسرے مذہبی اعمال کی ایک نئی شریعت تصنیف کر لی گئی۔" (تجدید صـ ۱۵)

"ஒரு புறம் முஷ்ரிகீன்களுடைய பூஜைத் தொகுதிகளின் இடத்தில், பாத்திஹா - ஜியாரத்து - நேர்ச்சை - நிய்யத்து சந்தனம் பூசுதல் - நிஷான் - கொடி - தஃஸியாக்களும், துக்கம் கொண்டாடுதல் முதலியனவும், இவ்வினத்தைச் சேர்ந்த ஏனையவைகளும் மார்க்க அனுஷ்டானத்தின் ஒரு புது ஷரீஅத்தை உண்டாக்கி விட்டன."

மௌதூதி சாஹிபுடைய மேற்சொன்ன வாசகத்தின் கருத்து மிகத் தெளிவாகவும், துலாம்பரமாகவும் உள்ளது.

Scanned by CamScanner

அவரிடத்தில் இவ்வெல்லாக் காரியங்களும் தெய்வீக லட்சணங்களாகவும், நாயனுடைய தன்மைக்கு அவசியமான அம்சங்களாகவும் உள்ளன. சிருஷ்டிகளில் யாதொரு உயிருள்ளவற்றுடனோ, அல்லது இறந்தவற்றுடனோ, இவ்வேலைகள் செய்கின்றவர்களெல்லாம் மௌதூதி சாஹிபிடத்தில் முஷ்ரிக்குகளாக உள்ளனர். ஏனென்றால் தெய்வீக லட்சணங்களையும், நாயனுடைய தன்மைக்கு அவசியமானவைகளையும் உயிரான அல்லது இறந்த எந்த சிருஷ்டிக்காவது உண்டு எனத் தரிப்படுத்துவது ஷிர்க்காகும். இன்னும், வேறுருவகையாகச் சொல்வதானால், இப்படிச் சொல்லலாம். அதாவது மௌதூதி சாஹிபிடத்தில் பாத்திஹா ஓதுவதனாலுமோ, நேர்ச்சை நிய்யத்து செய்வதனாலுமோ அல்லாஹ்வின் ரூஹுக்குத்தான் செய்ய வேண்டும். ஸியாரத்துச் செய்வதென்றால் மௌதூதி ஸாஹிபுடைய ஆண்டவனுடைய கபுரைத்தான் ஜியாரத்து செய்ய வேண்டும் கந்தூரி நடத்தவேண்டுமென்றால் மௌதூதி ஸாஹிபுடைய ஆண்டவனுடைய கபுரைத்தான் ஜியாரத்து செய்யவேண்டும் கந்தூரி நடத்தவேண்டுமென்றால் மௌதூதி ஸாஹிபுடைய ஆண்டவனுடைய மஸாருக்குத்தான் கந்தூரி நடத்தவேண்டும்.

சிருஷ்டிகளில் உயிரான, அல்லது இறந்துபோன யாருடைய றூஹுக்காவது (கத்தம், பாத்திஹாஓதி, நல்ல அமல்களைச் செய்து அவற்றின் தவாபை ஒருவன் (ஈஸால் செய்வது) சேர்த்து வைப்பானேயானால், அல்லது எந்த ஒரு மனிதருடைய கபுறையாவது ஸியாரத்துச் செய்தானேயானால், அல்லது எந்த ஒரு பெரிய மஹானுடைய மஸாரிலேயாவது கந்தூரி செய்தானேயானால் மௌதூதி ஸாஹிபிடத்தில் அவன் முஷ்ரிக்காகி (இணை வைத்தவனாகி) விடுகிறான் ஏனென்றால் இந்தக்காரியங்கள் அத்தனையும் மௌதூதி ஸாஹிபிடத்தில் தெய்வீக லட்சணமும், நாயகத்தனத்துக்கு அவசியமானதும் ஆகும். இவரிடத்தில் இவைகளை சிருஷ்டிக்களுக்குத் தரிப்படுத்துவது ஷிர்க்காகும். இதுதான் மௌதூதி ஸாஹிபின் மேலேயுள்ள வாசகத்தின் கருத்தாகும்.

Scanned by CamScanner

சங்கையான வாசகர்கள் மௌதூதி ஸாஹிபுடைய சாலக்கையும், தந்திரத்தையும் சற்று நோக்கவேண்டும். மேலே கூறப்பட்ட அவரது வாசகத்தில் ஜியாரத்து, கந்தூரி முதலிய மார்க்கத்திலுள்ள நல்ல கருமங்களை நிஷான் (பஞ்சா) தஃஸியத்து (துக்கம்கொண்டாடல்) முதலிய ஏனைய ஆகாத கருமங்களோடு சேர்த்துக் குழப்பிச் சொல்லியிருக்கிறார். ஏனென்றால், பாமர முஸ்லிம்கள் ஏமாந்து மார்க்கத்தில் ஆகுமாக்கப்பட்ட விஷயங்களையும் ஆகாத கருமம் என நினைத்து அவற்றை விட்டுவிடுவார்கள் என்பதற்காகத்தான் இந்தத் தந்திரம், மௌதூதி ஸாஹிபுக்கு இதுவும் தெரியாதா? பஞ்சா, நிஷான், துக்கம் (மாரடித்தல்) முதலியனவெல்லாம் ஆகாதவையென ஸுன்னத்து வல்ஜமா அத்துஉலமாக்கள் அளித்திருக்கும் மார்க்கத்தீர்ப்பு பத்வாவே அதற்குச் சான்றாகும்.

இப்பொழுது, இவ்விடத்தில் இன்னுமொரு விடயத்தை விளக்குவது நல்லது என்று நினைக்கின்றோம். அதாவது மௌதூதி சாஹிபு எந்தக் கருமங்களை முஷ்ரிக்கின்களுடைய பூஜைகளின் தொகுதிகளின் ஸ்தானத்தில் உள்ளவை என்று சொல்கின்றாரோ அவைகளுக்கெல்லாம், குர்ஆன், ஹதீதுகளில் ஆதாரமிருப்பது சூரியனைப் போல் துலாம்பரமானதாகும். கூறப்பட்ட கருமங்களுக்கு மார்க்க ஆதாரங்களைப் பார்க்க விருப்பமுடையவர்கள் "ஆயினயே மௌதூதியத்து" என்ற நூலின் இரண்டாம் பாகத்தைப் பார்க்கவும்.

## மார்க்கப் பெரியார்களின் கருமாத்துகளையும், அற்புதங்களையும் பற்றி மௌதூதியின் அபிப்பிராயம்.

மார்க்கப் பெரியார்களுடைய கருமாத்து, அற்புதங்களைப் பற்றி மௌதூதி ஸாஹிபுடைய கருத்தையும், அபிப்பிராயத்தையும் தெரிய வேண்டுமானால் அவருடைய "தஜ்தீது வஇஹ்யாயே தீன்" என்ற நூலின் 15வது

Scanned by CamScanner

பக்கத்தைப் பார்வையிடவும். அவர், அதில், தன்னுடைய கருத்தை வெளியிடுகின்ருர்.

• دوسری طرف بغیر کسی ثبوت علمی کے ان بزرگوں کی ولادت

وفات ظہور وغیاب کرامات وخوارق اختیارات وتصرفات

اور اللہ تعالیٰ کے یہاں ان کے تقربات کے کیفیات کے متعلق

ایک پوری میتھالوجی تیار ہوگئی جو بت پرست مشرکین کی

میتھالوجی سے ہر طرح لگاؤ کھا سکتی ہے (تجدید ص ۱۵)

"மற்ருெருபக்கம் அறிவு சம்பந்தமான எந்தவித ஆதாரமுமில்லாது. அந்தப் பெரியார்களுடைய ஜனனம், மரணம் தோற்றம், மறைவு, கருமாத்து, அற்புதங்கள் இன்னும் அல்லாஹ்விடத்தில் அவர்கள் முடுகுதலான விதங்கள் சம்பந்தமாக விக்கிரஹ வணக்கஸ்தர்களுடைய மெற்ருேலஜி (தாதுக்களிலிருந்து உலோகங்களைத் தயாரித்து வேலை செய்யும் கலை)யோடு எல்லாவிதங்களிலும் முற்றிலும் ஒப்பானதென்றே சொல்லும்படியானதோர் மெற்ருலஜி தயாராகி விட்டது."

ஸுன்னத்துவல் ஜமாஅத்துப் பெரியார்களுக்கு மறைந்ததில்லை, மார்க்கப் பெரியார்களுடைய கஷ்பு, கருமத்து, அற்புதங்கள், இறைவனிடம் அவர்கள் முடுகுதல் பெற்ற தன்மை ஆகிய இவைகளைப் பற்றி மௌதூதி ஸாஹிபுடைய கொள்கையும், கருத்தும் ஏனைய முகல்லிது அல்லாதவர்களான வஹ்ஹாபிகளுடைய கொள்கையேதாகும்.

இதனல், மௌதூதி ஸாஹிபு அந்த வஹ்ஹாபிகளின் கொள்கையையே தூக்கிச் சுமப்பவர் என்பது தெரிய

வருகிறது. அந்தக் கொள்கை ஸுன்னத்துவல் ஜமாஅத்து முஸ்லிம்களிடத்தில் குப்ரிய்யத் (மார்க்க முரண்) உடையதும் ரித்தத்து (மார்க்கத்தை விட்டு நீங்குவது)ம் ஆகும்.

நான் மேலெழுந்த வாரியாக மௌதூதி சாஹிபுடைய சில கொள்கைகளையும் சிந்தனைகளையுமே சுருக்கமாக வாசகர்களின் சமூகம் கொண்டுவந்திருக்கிறேன். அவற்றை அவர்கள் நன்கு பார்வையிட்ட பின்னர் மௌதூதி சாஹிபு யார்? அவருடைய கொள்கை எத்தகையது என்பதை நீங்களே நிதர்சனமாகக் கண்டு ஓர் முடிவுக்கு வர இயலும்.

கடைசியாக இதோ எனது ஒரு பத்வாவையும் சமர்ப்பிக்கின்றேன். இந்த பத்வாவின் காரணமாக சில மௌதூதிகளின் ஏசல், தூற்றுதல்களுக்கும், கண்டனத் தபால்களுக்கும் ஆளாகி அதிகமான மனவேதனையும் அவர்களால் அடைந்தேன்.

அந்த பத்வாவின் விபரம் வருமாறு :-

**பத்வா**

வினா : மார்க்க அறிஞர்கள், பரிசுத்த ஷரீஅத்தின் பிரகாரம் மார்க்கத் தீர்ப்புக் கூறும் முப்திகள், கீழே குறிப்பிடப்படும் வினாக்களுக்கு எத்தகைய பதிலைக் கூறுகிறார்கள் என்பதை விபரிக்க வேண்டுகின்றேன்.?

i. மௌதூதி ஸாஹிபுடைய கொள்கை எத்தகையது? கொள்கை சம்பந்தமாக அவர் எப்படிப்பட்டவர் ?

ii. மௌதூதி சாஹிபையோ, அவருடைய கொள்கையில் சேர்ந்தவர்களையோ இமாமாக முன்னிறுத்தி அன்னவரைப் பின்பற்றித் தொழலாமா? அத்தொழுகை கூடுமா? கூடாதா?

Scanned by CamScanner

iii. அவருடைய இயக்கத்தில் சேர்வது பற்றி மார்க்கத்தீர்ப்பு யாது?

இப்படிக்கு
கௌது முகையத்தீன் ஹளரத்து மகான்,
வேலூர் - (மதராஸ்)

விடை : அல்லாஹ்வைப் புகழ்ந்து, அவனது ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லாம் அவர்களின்மீதும், கிளையார் மீதும், தோழர்கள் மீதும், ஸலவாத்தும்,ஸலாமும் சொல்லிக் கொண்டு இவ்விடையை எழுதுகிறேன்.

i. மௌதூதி சாஹிபுடைய நூற்களிலிருந்து அவருடைய கொள்கைகள் பிசகானவை; கருத்துகள் மோசமானவை; சிந்தனைகள் தவறானவை என்பவை தெளிவாகத் தெரியவருகின்றன. கொள்கை சம்பந்தமான விடயத்தில் அவர் எந்த இமாமையோ, மதுஹபையோ பின்பற்றாதவர். மேலும் அவரின் குறிப்பான சிந்தனைகளைப் பொறுத்தவரை அவர் ஸுன்னத்துவல் ஜமாஅத்துடைய எல்லையைவிட்டும் தாண்டி வெளியே புறப்பட்டவராகும்.

ii. மௌதூதி சாஹிபையோ, அவருடைய கொள்கையைக் கொண்டவர்களையோ இமாமாக ஆக்கக் கூடாது. மேலும் அன்னவர்களைத் தொடர்ந்து தொழுதால் அத்தொழுகையை மீட்டித் தொழுவது கடமையாகும்.

iii. மௌதூதி சாஹிபுடைய இயக்கம் வழிகேடான இயக்கம் அந்த இயக்கத்தில் முஸ்லிம்கள் சேருவது வழி கேட்டின் பாதாளப் படுகுழியில் விழுவதற்கு ஒப்பாகும்.

முஸ்லீம்கள் மௌதூதியுடைய நூற்களையும், பிரசுரங்களையும் பார்வையிடாமலிருப்பதும். அவருடைய இயக்கத்தில் சேராமல் இருப்பதும் அவசியமானதாகும்.

ஹதீது ஷரீபில் வந்துள்ளது :-

"கெட்ட கொள்கைக்காரரிடம் போகாதீர்கள்: அவர்களை உங்களிடம் வரவும் விடாதீர்கள். (அப்படியானுல்) அவர்கள் உங்களை வழிகெடுக்க மாட்டார்கள் உங்களைக் குழப்பத்திலாக்க மாட்டார்கள்"

அதாவது நீங்கள் அவர்களுடைய வழிகேடு, குழப்பம் பொல்லாங்குகளை விட்டும் பாதுகாக்கப்பட்டவர்களாக ஆகுவீர்கள்.

அல்லாஹ் சுப்ஹான ஹூவத்தஆலா மிகவும் அறிந்தவன் இதை எழுதியவர்.

அபுல் ஜமீல் முகம்மது றிழ்வானுற் றஹ்மான் பாறூக்கீ முப்தீ மாலூஹ் (இந்தூர் சிட்டி)

சங்கையான வாசகர்கள் நீதி, நேர்மையுடன் தீர்ப்புக் கூறுங்கள்: மேலே கூறப்பட்ட கொள்கையின் பிரகாரம் மௌதூதி சாஹிபை தக்லீது இல்லாதவர் என்று நான் எழுதினேன். அவருடைய ஜமா அத்தே இஸ்லாமி இயக்கத்தை, முஸ்லிம்களை வழிகெடுக்கக்கூடிய இயக்கமென்று காட்டினேன். ஏனைய சுன்னத்துவல் ஜமா அத்து உலமாக்களும் மௌதூதி சாஹிபின் பேரில் காபீர், முர்தத்து என்பதாக பத்வா அளித்திருக்கிறூர்கள். இந்நிலையில் உண்மையை உணர முற்படாமல் மௌதூதிகள் ஏன் எரிந்து விழுகின்றூர்கள். அவர்களுடைய இவ்விடத்திலிருந்தே அவர்களின்குப்ரு, வழிகேட்டின் மீது பத்வாக் கிளம்பி இருக்கிறது. அதில் அவர்களை வழிகேடர்களென குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது: தக்லீதல்லாதவர்களும் கூட வஹ்ஹாபிகள், தேவுபந்திகளும் கூட மௌதூதி சாஹிபை வழிகெட்டவர் எனவும் அவருடைய இயக்கம் முஸ்லிம்களை வழிகெடுக்கக் கூடிய இயக்கம் எனவும் மார்க்கத்தில் தீங்கு விளைவிக்கக் காரணமான இயக்கம் எனவும், காட்டியிருக்கிறூர்கள்.

Scanned by CamScanner

மௌதூதி ஸாஹிபுவைப்பற்றி அமீர்தசரஸ், மௌலவி ஸனு உல்லாஹ்வின் அபிப்பிராயம்.

"مولینہ سلک اعتزال نہیں بلکہ اعتدال ہے اعتزال سے ہماری
مراد وہ مصدر نہیں ہے جس سے معتزلہ فرقہ مشتق کیا جاتا ہے
بلکہ اصلی معنوں میں اعتزال مراد ہے اس لفظ کے معنی علیحدگی
کے ہیں۔ ہم دیکھتے ہیں موصوف اپنی تحریرات میں عموماً مرزا صاحب
قادیانی کا تتبع کرتے ہیں (خطاب بہ مودودی) منقول از
حقائق مودودیت (مصنفہ داؤد غیر مقلد)

"மௌலானு மௌதூதி உடையவழி இஃதிஸால் இல்லை எனினும் இஃதிஸால் ஆகும். இஃதிஸால் என்பதைக்கொண்டு நம்முடைய கருத்து, எதிலிருந்து முஃதஸிலாக் கூட்டத்தாருடைய பெயரை எடுக்கப்பட்டதோ அந்த தாத்து அல்ல. எனினும் அசல் பொருளின்படி இஃதிஸால் தான் நம்முடைய கருத்து, இந்தப் பதத்திற்கு (அசல்) பொருள் விலகி இருத்தல் என்பதாகும். நாம் பார்க்கிறோம். அவர் (மௌதூதி) தனது எழுத்துக்களில் பொதுவாக மிர்ஸா ஸாஹிபு-காதியானியைப் பின்பற்றுகிறார்"

**மௌதூதி சம்பந்தமாக தேவ்பந்து பத்வா**

முஸ்லிம்கள் ஒருபோதும் அறவே இந்த இயக்கத்தில் சேராதிருப்பது அவசியமாகும். இவ்வியக்கம் முஸ்லிம்களைக் கொல்லக்கூடிய நஞ்சாகும். ஜனங்களை இதில் சேரவிடாது தடுக்கவேண்டும். இதில் சேர்ந்தால் பிரயோசனம் அடைவதற்கு மாறாக நஷ்டமே அடைவார்கள். ஷரீஅத்தின் படி இந்த இயக்கத்தில் பங்கு பெறுவது ஒருபோதும் கூடவே கூடாது. எவன் ஒருவன் இந்த ஜமாஅத்தின் கருத்துக்களைப் பிரசாரம் செய்து பரப்புகின்றானோ அவன்

Scanned by CamScanner

நன்மைக்கு மாற்றமாக பாவகாரியமே செய்கின்றான். அவனும் (அந்த) தீமையான குணபாட்டை விட்டும் தப்பித்துக்கொள்ள முடியாது. மேலும், அவன் ஜனங்களைப் பாவச் செயலளவிலேயே அழைக்கின்றான். எந்தப் பள்ளியிலாவது மௌதூதி ஸாஹிபுடைய கொள்கையுடைய இமாம் இருந்தால் அவருக்குப் பின்னால் தொழுவது மக்றூஹ் ஆகும்.

அல்லாஹ் மிக அறிந்தவன் - இதை எழுதியவர்.
அஸ் ஸெய்யிது மஹ்தி ஹஸன் தேவுபந்து.
தலைமை முப்தி, தாறுல் உலூம் மத்ரஸா. ஹிஜ்ரி 1370
(2.) "இந்த விடை சரியானதே"

—மஸ்ஊது அஹ்மது தேவுபந்து,
உதவி முப்தி. தாறுல் உலூம்மத்ரஸா.
22 ஜமாதுல் ஆகிர், ஹிஜ்ரி 1370.

(இந்த பத்வாக்கள் கைறுமுகல்லிது தாவூதுவால் கோர்வை செய்யப்பட்ட "ஹகாயிகே மௌதூதிய்யத்" எனும் நூலில் இருந்து எடுத்து எழுதப்பட்டவை)

## மௌதூதி ஸாஹிபுவைப் பற்றி முப்தீ கிபாயத் துல்லாஹ் திஹ்லவியின் பத்வா

"மௌதூதி ஜமாஅத்தின் அப்ஸர் மௌலவி அபுல் அஃலா மௌதூதியை நான் அறிவேன் : அவர் ஒரு நம்பிக்கைக்குப் பாத்திரமான நன்கு மதிக்கப்பட்ட ஒரு ஆலிமிடத்தில் கல்வி பயின்ற சீடரல்ல. அவருடைய ஆராய்ச்சி அவரின் விளக்கத்தைப் பொறுத்தவரை விசாலமானதாக இருந்தாலும், மார்க்க ஞானத்தின் முன்னே பலஹீனமானதாகும்: அவரது ஆராய்ச்சி இஜ்திஹாதின் போக்கைக் காட்டுகின்றது. மேலும் இதே காரணம்தான் அவருடைய கட்டுரைகளிலும், பெரும் பெரும் மலைகளைப் போன்ற உலமாக்கள் பேரிலும்-அது மட்டுமா-சங்கை நிறைந்த ஸஹாபாக்கள் பேரிலும் கூட குதர்க்க ஆட்சேபனைகளைக் கொண்டு காணப்படுகின்றன.

Scanned by CamScanner

ஆகையால் முஸ்லிம் இந்த இயக்கத்தை விட்டும் விலகி இருப்பது அவசியமாகும். மேலும் அன்னவருடன் சேர்ந்து உறவாடி ஐக்கியப்பட்டிருப்பதும் கூடாது. அவருடைய கட்டுரைகள் வெளி ரங்கத்தில் 'மனதைக் கவரக் கூடியதாகவும், நல்லதைப் போல இருந்தாலும் அதனால் (மார்க்க விலக்குகளுக்குத் தலைசாய்க்கும் தன்மை இல்லாமலாகி கட்டுப்பாடில்லாத) சுய இச்சையுடைய மனப்பான்மை மனதில் உறைந்துவிடும். மேலும் மார்க்கப் பெரியார்களின் பேரில் கெட்ட எண்ணத்தையும் உண்டாக்கிவிடும்."

மண்டையில் மூளையும், மூளையில் புத்தியும், புத்தியில் விளக்கமும், இருக்கக் கூடிய ஒவ்வொரு முஸ்லிமும் மௌதூதி ஸாஹிபுடைய இத்தகைய ஆராய்ச்சியையும் : கொள்கைகளையும் பார்த்த பின்னர் மௌதூதி சாஹிபுடைய வழியானது எம் பெருமானார் ஸல்லல்லாஹீ அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஷரீஅத்தே முஹம்மதிய்யா என்ற நன்னெறி வழியோடு எந்த விதத்திலும் சம்பந்தமும், தொடர்பும் கொண்டதாக இல்லை என்ற முடிவுக்கே நிச்சயம் வருவான். இந்த உண்மையை மௌதூதி ஸாஹிபோ அல்லது மற்ற மௌதூதியாக்களோ யாரும் மறுக்க வழியில்லை. (ஏனென்றால், இந்த உண்மையை மௌதூதி ஸாஹிபுவே தனது வாயாலும், எழுதுகோலாலும் வெளிப்படுத்தி இருக்கின்றார்) எவ்வாறெனில் மௌதூதி ஸாஹிபு தர்ஜுமானுல் குர்ஆனில் சொல்கின்றார்.

"ہم اپنے مسلک ونظام کو کسی شخص خاص کی طرف منسوب کرنے کو ناجائز سمجھتے ہیں۔ مودودی تو درکنار ہم تو اس مسلک کو محمدی کہنے لئے بھی تیار نہیں۔ (ترجمان القرآن)

Scanned by CamScanner

"நாம் நமது மத்ஹபை - வழியை - குறிப்பான எந்த ஒரு நபருடனேயும், சேர்ப்பதையும் கூடாது என்பதாகக் கருதுகின்றோம். மௌதூதி என்று சொல்வது ஒருபுறமிருக்கட்டும்: நாம் இந்த வழியை முஹம்மதிய்யா (உடைய வழி) என்றும் கூடச் சொல்வதற்குத் தயாராக இல்லை."

மௌதூதி ஸாஹிபுடைய இந்த வாசகத்தினுல்" அவருடைய இந்த இயக்கமானது, முஹம்மதியாவுடைய இயக்கத்திற்கு ஒருவகையான வழியோடு அந்த சம்பந்தமுமே இல்லை என்பதுவும் பட்டப்பகல் போல நன்கு விளங்குகின்றது.

ஆகையால் இதை விளங்கிய பின், அதாவது, மௌதூதி ஸாஹிபின் ஜமாஅத்தே இஸ்லாமி இயக்கத்துக்கு முஹம்மதிய்யாவுடைய வழியோடு ஒரு தொடர்பும் கிடையாது என்று அறிந்த பிறகு ஒவ்வொரு முஸ்லிமும் மௌதூதி ஸாஹிபின் ஜமாஅத்தே இஸ்லாமி இயக்கத்தில் சேருவது கூடாது - ஹறும் - என்ற முடிவுக்கே வருவான்

வஸ்ஸலாம்

Scanned by CamScanner

## அகஇருள் அகற்றி அறிவொளி
## நல்கிடும் அற்புதமான
## ஞான நூற்கள்

படியுங்கள் ✠ பலன் பெறுங்கள்

**6 புத்தகங்கள் ரூபாய் 40/-**

சுன்னத் வல் ஜமாஅத்தின்
தூய கொள்கைகளை விளக்கி அறிவுத்
தெளிவூட்டும் அற்புத நூற்கள்

**6 புத்தகங்கள் ரூபாய் 25/-**

---

முன் பணம் M.O. அனுப்பி நூற்களை பெற்றிட
தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

## ஹிஸ்புல்லாஹ் சபை

ஸூஃபி மன்ஸில்
குத்துக்கல் தெரு, காயல்பட்டணம் - 628 204.